


# கடத்தலுக்குக் கடன் கொடுத்த வங்கி

அமெரிக்க பத்திரிகையாளர் ஒருவர் தாம் தங்கியிருந்த ஹோட்டல் அறையில், சந்தேகத்துக்குரிய முறையில் இறந்து கிடந்தார். இவர் பெயர் ஜோசப் டி. காஸலாரோ. பி. ஸி. ஸி. ஐ. (Bank of Credit and Commerce International) என்ற வங்கியில் நடந்த தில்லுமுல்லுகளைப் புலனாய முயன்றதால்தான் இவருக்கு இந்தக் கதி என்று கருதப்படுகிறது. கடந்த ஜூலை 29-ம் தேதி இறந்து போன குவாதிமாலா தேசத்துப் பத்திரிகையாளர் 'ஆன்ஸன் ங்க் யாங்'கும் (Anson Ng Yong) இந்த வங்கியின் தில்லுமுல்லுகளை ஆராய்ந்து அம்பலப்படுத்தப் புறப்பட்டவர்தாம்!

இந்தியாவில் பிறந்த பாகிஸ்தானியர் ஒருவர், அபு தாபி அரசர் ஒருவருடன் இணைந்து 1972-இல் ஆரம்பித்த பி. ஸி. ஸி. ஐ.க்கு உலகெங்கிலும் கிளைகள்.

அயல்நாடுகளில் நாம் முதலீடு செய்யவும் அயல்நாட்டவர் இங்கு முதலீடு செய்யவும் இந்திய அரசு பல கட்டுப்பாடுகளை விதித்திருக்கிறதல்லவா? ஆனால் வேறு பல நாடுகளில் இத்தகைய கட்டுப்பாடுகள் கிடையாது. இத்தகைய நாடுகளில், அயல் நாட்டு வர்த்தகத்துக்குத் தாராளமாகக் கடனுதவி செய்து வந்தது பி. ஸி. ஸி. ஐ.

சமீபத்தில்தான், பி. ஸி. ஸி. ஐ. பல தவறான நடவடிக்கைகளுக்குக் கடனுதவி செய்ததென்பது வெளியாகியுள்ளது. இதைக் கண்டுபிடித்தது பாங்க் ஆஃப் இங்கிலாந்து. இச் செய்தி பரவ ஆரம்பித்ததும் கேமன் தீவுகளில் உள்ள பி. ஸி. ஸி. ஐ. கிளை அவசர அவசரமாக மூடப்பட்டது! பின்னர் இந்த வங்கியின் வாஷிங்டன் கிளையை அமெரிக்க அரசு கைப்பற்றி 'சீல்' வைத்தது.

பி. ஸி. ஸி. ஐ. செய்ததாகக் கருதப்படும் தவறுகள் :

●● பல நாடுகளில் போதைப் பொருள் கடத்தலுக்கும் வியாபாரத்துக்கும் தெரிந்தே கடன் கொடுத்தது. கணக்குகளில் மட்டும் வேறு தொழில்களுக்குக் கடன் கொடுக்கப்பட்டதாக எழுதப்பட்டிருக்கும்.

●● பாகிஸ்தானின் ரகசிய அணு ஆயுத ஆய்வுக்கும் தயாரிப்புக்கும் கடனுதவி வழங்கியது. (அமெரிக்கப் புலனாய்வாளர்கள் இந்த நடவடிக்கையில் ஜெனரல் ஜியாவுக்கு நிறையப் பங்கு உண்டு என நம்புகின்றனர்.)

●● மிகச் சாமர்த்தியமாக ஆண்டு தோறும் லாபக் கணக்குக் காட்டியது. (உண்மையில் ஏராள நஷ்டம்!)

இந்திய ரிசர்வ் வங்கியிடம் முன்பு குட்டுப்பட்டிருக்கிறது, பி. ஸி. ஸி. ஐ. போலி விமான டிக்கெட்டுகள் மற்றும் பாஸ்போர்ட்டுகளுக்கு அன்னியச் செலாவணி வழங்கியதாகக் குற்றச்சாட்டு. இதற்குப் பிறகு வாலைச் சுருட்டிக் கொண்டு சற்று அடங்கி இருந்தது.

பி. ஸி. ஸி. ஐ. இந்தியக் கிளையில் பெரிய அளவில் தவறுகள் நடந்துள்ளதாக நிருபணமில்லை. ஆனால் அயல் நாட்டிலிருந்து கமிஷன் பணத்தைக் கொண்டு வரும் - கறுப்பை வெளுப்பாக்க - பலருக்கு உதவியிருக்கக் கூடும் என்று சந்தேகிக்கப்படுகிறது. இந்தியக் கிளையில் நிதி வைத்துள்ளவர்களுக்குப் பணம் ஒழுங்காகத் திருப்பித் தரப்பட்டு விடும். (ரிசர்வ் வங்கி, பி. ஸி. ஸி. ஐ. கிளையை ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியாவின் கீழ் கொண்டு வர ஆணையிட்டுள்ளது.)

ஆனால் பங்களாதேஷ், பாகிஸ்தான் உள்பட உலகின் சுமார் 60 நாடுகளில், பலருக்கு, பி. ஸி. ஸி. ஐ. யில் போட்ட பணத்தில் பத்து சதம் கூடத் திரும்பி வராது!

இந்திய பி. ஸி. ஸி. ஐ. காலிஸ்தான், ஜே. கே. எல். எஃப் போன்ற பிரிவினை சக்திகளுக்கு அண்டை அயல்நாடுகளில் தங்கித் தங்களைப் பலப்படுத்திக் கொள்ள உதவியிருக்கக்கூடும் என்று சந்தேகிக்கப்படுகிறது.

இதனை ஆராயப் போனால் வேறு பல தில்லுமுல்லுகளும் வெளிப்படும் என்பதால் சக்தி மிக்கவர்கள் பூசி மெழுகப் பார்ப்பதாகவும் ஒரு கருத்து நிலவுகிறது.

—வி. ஜி.

கார்ட்டூன் நன்றி : கார்டியன்.



# மீண்டும் சோனியா

**து**ருப்பிடித்த நாதாங்கிகள் நாராசமாய் விலக, நூலாம்படை போர்த்திய ராட்சதக் கதவுகள் தமது வயதான கீல்களின் மேல் பேரிரைச்சலுடன் திறக்கின்றன - புதிய தொழில், வர்த்தகக் கொள்கையைத்தான் குறிப்பிடுகிறேன்.

அரை நூற்றாண்டுக் காலமாய் அடைத்துக் கிடைந்த கதவுகளைத் திறந்து விட்டிருக்கின்றார் பனாசினா. இதன் பின்னே பிரதமர் கொடுத்த தைரியம் இல்லாமலில்லை. வளர்ந்த நாடுகளிலிருந்து மூலதனமும் தொழில் நுட்பமும் வந்து, நமது ஊர்க் கட்டை வண்டி டெக்னாலஜியைப் பொழுது விடிவதற்குள் ராக்கெட் ஏற்றி விடும் என்றில்லாவிட்டாலும், நிச்சயமாய் ஒரு போட்டிச் சூழலை உண்டாக்கும். உள்ளூர் உற்பத்தியாளர் தமது மூளையைத் தூசு தட்டிப் புதிதாய், சிறப்பாய் என்ன செய்யலாம் என்று யோசிக்க வேண்டி வரும். தரம் அதிகரிக்கும். பண்டம் வாங்குபவன் பயனடைவான். தொழில் தொடங்கத் தடை நீக்கம் என்பதால் வேலை வாய்ப்பும் நாளடைவில் பெருகும். பொருளாதாரம் அபிவிருத்தி அடையும்.

ஆனால் இது நிஜமாகவே கலப்படமில்லாத வரப்பிரசாதம்தானா?

புதிய தொழில் கொள்கைகளினால் பன்னாட்டு நிறுவனங்கள் இங்கே வருவது, நம்மை முன்னேற்றி விட வேண்டுமென்ற ஆசையினால் அல்ல; அவற்றிற்கு லாபமே குறி. அதில் தப்பில்லை. ஆனால் லாபத்துக்காக என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்கிற அவற்றின் மனப்பான்மைதான் தப்பு.

தங்கள் வளர்ச்சிக்கு இடையூறு செய்யும் தலைவர்கள் மற்றும் அரசுகளைத் தீர்த்துக் கட்டுவதிலிருந்து, வேவு பார்த்தல், உயர் அதிகாரிகள் மற்றும் ஊழல் மந்திரிகளை விலைக்கு வாங்கல் போன்ற பல்வேறு அட்டூழியங்களையும் இவை பரவலாகச் செய்திருக்கின்றன. அதிலும் பிற்பட்ட நாடுகளென்றால் தொக்கு.

இ.வ.ன் ஏதோ நிழலைக் கண்டு பயப்படுகிறானென்று நினைக்க வேண்டாம். நோபல் பரிசு பெற்ற லத்தீன் அமெரிக்கக் கவிஞர் பாப்லோ நெருடா, தமது 'தி யுனைட்டெட் ஃப்ரூட் கம்பெனி' கவிதையில் நீளமாகவே எச்சரித்திருக்கிறார். அவரைப் போல் கவிதை எழுதத் தெரியாவிட்டாலும் வேறு பல அறிஞர்களும் 'கதவைத் திறந்துதான் ஆக வேண்டும் என்கிற நமது இக்கட்டான சூழ்நிலையிலும் கண் விழிப்போடு இருப்பது அவசியம்' என்பதைச் சொல்லியிருக்கிறார்கள். கத்தி மேல் நடக்கிற சமாசாரம்தான்.

## துப்பாக்கிச் சன்யாசி :

**தீ**ரேந்திர பிரம்மச்சாரி தம்மைச் சன்யாசி என்று சொல்லிக் கொள்கிறார். புதுதில்லியின் மையத்தில் அரசு நிலத்தில் 'மத்திய யோக ஆராய்ச்சி இன்ஸ்டிட்யூட்' நிறுவி அரசுப் பணத்தில் கம்ப்யூட்டர் முதல், மூளை ஆராயும் மருத்துவக் கருவிகள் வரை இறக்குமதி செய்து புழுதிபடியப் போட்டு வைத்திருந்தார். யோகப் பயிற்சி உடலில்



என்னென்ன மாறுதல்களைச் செய்யும் என்று ஆராய இவை அவசியமாம்! போதாதற்கு ஜம்முவில் ஒரு துப்பாக்கித் தொழிற்சாலையும் வைத்திருக்கிறார்.

அரசிடமிருந்து குத்தகைக்கு எடுத்த நிலத்தை இவர் ஐந்து நட்சத்திர ஓட்டல் தொடருக்கு ரகசியமாக விற்க முயற்சி பண்ணவே, அமைச்சகங்கள் கோர்ட்டுக்குப் போகலாமா வேண்டாமா என்று யோசிக்க ஆரம்பித்தன. அதற்குள் பிரம்மச்சாரி கதவடைப்புச் செய்தார். இப்போது வேலையிழந்த ஊழியரும், யோகா மாணவர்களும் இவரை ஒரு ஏமாற்றுப் பேர்வழி என்று குற்றம் சாட்டிக் கச்சேரிக்கு இட்டுச் சென்றிருக்கின்றனர்.

ஜூலை 27-ம் தேதி புதுதில்லியின் பாட்டியாலா ஹவுஸ் கோர்ட்டுக்கு, விசார

தர்கள் மூலம் வருகின்றனவாம்.

மாதம் சுமார் 2.7 கோடி ரூபாய் நஷ்டப்படும் வாயு தூத் விமான சேவையை நிறுத்தி விடக் கூடாது என்று கோரி, இந்த நிறுவனத்தின் அதிகாரிகள் எல்லாம் சோனியாவிடம் போய் மகஜர் கொடுத்தனர். அவரும் 'பரிவாக'க் கேட்டு விட்டு 'ஆவன செய்கிறேன்' என்றாராம். இது நடந்தது ஆகஸ்ட் 10-ம் தேதி. பத்து நாட்களுக்கு முன்னால் வான்பயண அமைச்சர் மாதவராவ் சிந்தியாவிடம் இதே மகஜரைக் கொடுத்த போது, அவர் ''வாயு தூத்தை மூடும் உத்தேசம் இல்லை; யாரும் நடுத்தெருவில் நிற்க மாட்டீர்கள்'' என்று உறுதியளித்த பின்னும் இவர்கள் சோனியாவிடம் போயிருக்கிறார்களென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!







ணைக்கு வந்த பிரம்மச்சாரியைப் பழித்துக் குரலெழுப்பிய சிலரை 'ஸ்வாமிஜி'யின் ஆதரவாளர் நையப் புடைத்தனர். அதைப் புகைப்படம் பிடிக்க முயன்ற பத்திரிகையாளரின் முதுகும் வீங்கியது!

இதன் நடுவே அரசின் உத்தரவை மீறி யோகாஸ்ரமத்தில் இருக்கும் ஏர்கண்டிஷனர் உட்பட விலையுயர்ந்த இயந்திர வகையறாக்கள் இரவோடிரவாய் டிரக்கில் ஏறி மறைந்து கொண்டிருக்கின்றனவாம். சந்தேகம் ஸ்வாமியின் மேல்தான். தீரேந்திரர் தீரர்தான்.

## மீண்டும் சோனியா!

''அவரைப் பழிக்காமல் இருந்தால் போதும். எனக்கு எந்தப் பதவியும் வேண்டாம்'' என்று சொன்ன சோனியாவுக்கு மனம் மாறி வருகிறது போலும். இப்போதெல்லாம் ''அம்மையாரின் விருப்பம்'', ''அம்மையார் கூறினார்'' என்று விதவிதமான வேண்டுகோள்கள் நம்பர் 10, ஜன்பத் ரோட்டிலிருந்து 'உள்வட்ட' மனி

## விரிசல் ?

காங்கிரஸில் விரிசலுக்கான அறிகுறிகள் தோன்றி விட்டதாகக் கூர்ந்து கவனிப்பவர்கள் கூறுகின்றனர். ''சோனியா மனது வைத்தால் நரசிம்மராவ் இடத்தைக் காலி செய்ய வேண்டியதுதான்'' என்பது ஒரு சாரார் கூற்று. மனது வைக்க மாட்டார் என்பது நிச்சயமில்லை. பிரதமர் ரொம்பத் தளர்ந்து விட்டாராம்.

அர்ஜுன் சிங் தனித்தனியாக எம்.பி.க்களைச் சந்தித்துக் கைக்குள் போட்டுக் கொள்ளத் தொடங்கி விட்டாராம். சியாச்சின் இளேசியருக்கும், விமானந் தாங்கிக் கப்பல்களுக்கும் போய் வந்து கொண்டிருக்கும் சரத் பவார் ஆசையைத் துறந்து விட்டதாகக் கூற முடியாது. ஆனால் பதவியைப் பிடிப்பதற்கு எம்.பி.க்களின் தயவு முக்கியம். இதில் அவர் அர்ஜுன் சிங்குக்குப் பக்கத்தில் கூட வர முடியாது என்கிறார்கள்!

- இமயவரம்பன்.

# கோதாவரி புஷ்கரம் கோலாகல வைபவம்!

மகாமாங்கம் போன்று பன்னிரண்டு வருடங்களுக்கு ஒருமுறை வருவது கோதாவரி புஷ்கரம். இந்த ஆண்டு ஆகஸ்ட் 14 முதல் ஒரு கோடி பக்தர்கள் கோதாவரி நதியில் புனித நீராட இருக்கிறார்கள். முதல் 12 நாட்கள் (25 முடிய) விசேஷம். புண்ணிய நதியில் நீராடுவதுடன், தங்களது முன்னோர்களுக்குப் பிண்டம் படைத்து வழிபடுகிறார்கள் மக்கள்.

மஹாராஷ்டிரத்தில் நாஸிக் அருகே உற்பத்தியாகி, ஆந்திரா வழியாகப் பெருக்கெடுத்து, 900 மைல் நீளம் ஓடி, ராஜமுந்திரி அருகே பரந்து படர்ந்து, தவளேஸ்வரத்தில் ஏழு நதிகளாகப் பிரிந்து வங்காள விரிகுடாவில் சங்கமிக்கிறாள், கோதாவரி என்னும் கவுதமி.

சென்னை - கல்கத்தா ரயில் பாதையில் ஆந்திராவின் முக்கிய நகரம் ராஜமுந்திரி. கோதாவரி புஷ்கரத்தின் போது வரலாறு மிக்க இந்தப் பட்டணம் பரபரப்படைகிறது. ராஜமுந்திரி போன்று கோதாவரியின் கரைகளிலுள்ள கோவூர், திராட்சராமம், அன்னாவரம், ஸோமபல்லி போன்ற தலங்களிலும் புஷ்கரக் குளியல் நடைபெறுகிறது.

## புஷ்கரம் பிறந்த கதை :

அறியாமல் ஒரு பசுவைக் கொன்ற பாவத்திற்காகக் கௌதம முனிவர் சிவனைக் குறித்துத் தவம் செய்து, கங்கையைத் தம் ஆஸ்ரமம் அருகே ஓடச் செய்தார். அதனால் அந் நதி கௌதமி என அழைக்கப்படுகிறது.

பிரும்மா புஷ்கரனை சிருஷ்டித்து அவனைப் புண்ய நதிகளின் தலைவனாகச் செய்தார். அந்த ஆறுகள் மோட்சம் தரும் தீர்த்தங்கள் ஆயின. கௌதமரால் சபிக்கப்பட்ட இந்திரனுக்குக் கோதாவரியில் ஸ்நானம் செய்தபின் சாப விமோசனம் கிடைக்கிறது. இதைக் கண்ட கௌதமர், புஷ்கரனை 12 புண்ய நதிகளில் முறை போட்டுக் கொண்டு தங்கச் செய்தார். அதன்படி குரு வெவ்வேறு ராசிகளில் நுழையும் போது அந்தந்த நதிகளில் புஷ்கர விழா கொண்டாடப்படுகிறது.

## ராஜ மஹேந்திர புரம் :

கோதாவரி புஷ்கரத்தின் நடுநாயகப் பட்டணம் ராஜமுந்திரி எனப்படும் ராஜ மகேந்திரபுரம்தான். ''வேங்கி நாட்டின் ரத்தினம்'' என்று வரலாறு படைத்த நகரம். வியாச பாரதத்தைத் தெலுங்கில் மொழி பெயர்த்து, நன்னய பட்டர் என்ற புலவர்கோ, மன்னன் ராஜா மஹேந்திரனுக்குச் சமர்ப்பித்தார். கிருஷ்ணா - கோதாவரிக்கு இடையே உள்ள நாட்டை சாளுக்கிய அரசன் ராஜமஹேந்திரன் ஆண்டான். பின்னர், கிருஷ்ணதேவராயர் ஆட்சி - கலை, இலக்கியம் மேன்மையுற்ற பொற்காலம் எனப்பட்டது.

## கரையெல்லாம் கற்றளிகள் :

கோதாவரி நதிக் கரையெல்லாம் கோயில்கள். ராஜமுந்திரியில் இடறி விழுந்தால் ஆலயத் தூண்களில் மோதிக் கொள்ள வேண்டும். காசி விஸ்வேஸ்வரர் கோயில் அருகே 9000 அடி நீளமுள்ள கான்கிரீட் பாலம் உள்ளது. இதில் ரயிலும் சாலை வாகனங்களும் செல்லும் வசதி இருக்கிறது. மிகப் பெரிய இன்ஜினியரிங் சாதனை என ரயில் நிர்வாகம் பெருமை கொள்கிறது. பாலம் அருகே விசேஷமான புஷ்கர ஸ்நான கட்டம் உள்ளது. இங்கிருந்த குடிசை மக்களை அகற்றி, ஊருக்கு வெளியே ஒரு காலனியில் 'பக்கா' கட்டடங்களில் குடியேற்றி உள்ளது, ஆந்திர அரசு.

## புஷ்கரம் ஒரு சவால் :

ஒரு நாளைக்கு பத்து லட்சம் என்னும்படி 12 நாட்கள் வரும் யாத்ரீகர்கள் வெள்ளத்தைச் சமாளிப்பது என்பது சாதாரண காரியமல்ல. 'சவாலே சமாளி' என்று ஆந்திர அரசு ஊக்கமுடன் ஏற்பாடுகள் செய்துள்ளது. புஷ்கரத்திற்கு அரசு ரூ 12 கோடி ஒதுக்கி இருக்கிறது. பத்து இலாகாக்களிலிருந்து 10,000 சர்க்கார் ஊழியர்கள்; 4000 போலீஸ் அதிகாரிகள்; 1500 முனிஸிபல் ஊழியர்கள்... இத்யாதி. (இவர்கள் கூட்டமே பெரிதாகி விடுமோ!)

சிவில் சப்ளைஸ் இலாகாவிற்குத்தான் பெருத்த தலைவலி. இத்தனை யாத்ரீகர்களுக்கும் முறையாகத் திட்டமிட்டு உணவுப் பொருள்களை முன்பே சேகரித்து, தகுந்த முறையில் எல்லா இடங்களிலும் விநி



◆ ராஜமுந்திரியில் ஒரு ஸ்நான கட்டம் புஷ்கர விழாவின் போது இப்படி மாறுகிறது!

யோகிக்க வேண்டுமே!

54 குளிக்கும் படித்துறைகளில் 24 ஸ்நான கட்டங்கள் புதுப்பிக்கப்பட்டன. மின்சார இலாக்கா துறைதோறும் விளக்குகள் அமைத்துள்ளது. 110 ஹோட்டல்கள் எந்த மூலைக்கு? 65 தாற்காலிக தங்கும் கூடங்கள் நிறுவப்பட்டுள்ளன. 17 அற ஸ்தாபனங்கள் தினசரி 27,000 உணவுப் பொட்டலங்கள் வழங்குகின்றன.

## ரேஸர் பக்கிரிகளும் தடுப்பு ஊசிகளும் :

போலீஸ் படை சும்மா இருக்குமா? ராஜமுந்திரி ஜேப்படி நிபுணர்களை புஷ்கரப் புனித ஸ்நானம் செய்ய விடாமல், அரெஸ்ட் செய்து, செகந்திராபாத் சிறைக் குழாயில் குளியுங்கள் என்று அமர்த்தி விட்டது. ஒரிஸா போன்ற அண்மை ராஜ்யத்திலிருந்து வரும் இறக்குமதி கேடிகளையும் அந்த ராஜ்ய போலீஸ் மூலம் அடையாளங் கண்டு அவர்களையும் 'மாமியார்' வீட்டுக்கு அழைத்துச் சென்று விட்டது. இத்தனையையும் மீறி ரேஸர் பக்கிரிகள் வந்தால் கவுதமி காப்பாற்றுவாளாக!

ரயில் இலாகா சக்கரங்கள் வேகமாக இயங்குகின்றன. ஸ்பெஷல் ரயில்கள், இருக்கிற வண்டிகளில் கூடுதல் பெட்டிகள், ஸ்டேஷனில் அதிகப்படி டிக்கெட் சன்னல்கள்... இத்யாதி.

வாயுதூதன் அதிக விமானம் அனுப்புகிறான். திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி போன்று ஏழு மலையானுக்கு ஒரு மாதிரிக் கோயிலை ராஜமுந்திரியில் சிருஷ்டித்துள்ளது. கலாகேந்திராவில் பக்தர்களுக்காகக் கலை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்துள்ளனர். அன்னாவரம் சத்ய நாராயணா கோயில் மாதிரி ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளது.

முன்பெல்லாம் புஷ்கரத்தில் தொத்து வியாதி, வரும் என அஞ்சினர். இப்போது 'ஹெல்த்' இலாகா கையில் ஊசியுடன் அலைகிறது.

## வீரேசலிங்கத்திற்கு அஞ்சலி :

சமூக சீர்திருத்தவாதி, தேசபக்த தியாகி கந்துகூரி வீரேசலிங்கம் என்ற சிம்மம் வாழ்ந்த ஊர் ராஜமுந்திரி. வீரக் கனல் எழுத்தினால் விவேக வர்த்தினி பத்திரிகை மூலம் புதிய சமூக விழிப்புணர்ச்சியை உண்டாக்கிய பந்துலு அவர். துணிச்சலான அவரது பணிக்கு துணைவி ராஜலட்சுமியின் துணை அதிகம். இருவரும் வாழ்ந்த இல்லத்தை அரசு புஷ்கரத்தையொட்டி ரூ. 3.5 லட்சம் செலவழித்துப் புதுப்பித்துப் பொருட்காட்சியாக அமைத்துத் தனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டிருக்கிறது.

## உற்சாக முணுமுணுப்பு!

பொது ஜனம் உற்சாகமாக இருப்பினும் முணுமுணுக்காமல் இல்லை. ஹைதராபாத்திலிருந்து ராஜமுந்திரிக்கு ரயில் டிக்கட் - சென்ற புஷ்கரத்தின் போது ரூ. 29.75; இம்முறை ரூ. 96/- ஆகஸ்ட் 16க்குப் பிறகு அமுல்வந்த புதிய கட்டணம் இன்னும் அதிகம். விலைவாசி எப்படி உயர்கிறது என்பதே பேச்சு!

–சுபஸ்ரீ



# மனைவிக்குச் சலாம் போட்ட மேதை!

'மனைவியைப் பூஜிப்பவன்' என்று அவர் தம்மை வர்ணித்துக் கொண்டார். இது வெறும் பேச்சல்ல. அவர் புத்தாடை அணியும்போதெல்லாம் முதன் முதலில் மனைவிக்கு சலாம் செய்வாராம். சிவராணியும் சிரித்துக் கொண்டே அவருக்கு ஆசி கூறுவாராம்.

ஒரு தடவை சிவராணி சொன்னார் :- "பெரியவங்களுக்குன்னா சலாம் செய்வாங்க! நான் உங்களை விட வயசிலேயோ, உறவிலேயோ பதவியிலேயோ பெரியவ இல்லையே. நீங்க ஏன் சலாம் பண்றீங்க?"

பிரேம் சந்த் பதிலளித்தார். "வயசு, உறவு, பதவி இதெல்லாம் முக்கியமில்லே. நான் இருதயத்தைத்தான் பார்க்கிறேன். உன் இருதயம் தாயோட இருதயம். அம்மா குழந்தைகளுக்கு உணவூட்டி மகிழறது போல நீ என்னைக் கவனிச்சுக்கிட்டு சந்தோஷப் படறே. ஆகையாலே நான் உனக்கு எப்போதும் சலாம் போடுவேன்."

பிரபல முஸ்லீம் வரலாற்று மேதை மௌலானா சிப்லி நோமானி, பிரேம் சந்தின் உருதுப் படைப்புக்களைப் படித்து விட்டுச் சொன்னாராம்: "இந்துஸ்தானத்தின் ஐந்து கோடி முஸ்லீம்களில் பிரேம் சந்தைப் போல் உருது எழுதக் கூடியவர் யாருமில்லையே!"

ஆச்சார்ய சதுர்சேன்சாஸ்திரி என்பவர் இஸ்லாமைத் தாக்கி 'இஸ்லாம் கா விஷ விருக்ஷ' என்ற நூலை எழுதினார். இது பிரேம்சந்துக்கு மிகவும் வேதனையளித்தது.

பெரும்பாலான இந்துக்கள் சகிப்புத் தன்மையற்றவர்களாக இருந்த காலம் அது. தம் கருத்து பெரும்பான்மையான இந்துக்களுக்குப் பிடிக்காது என்று தெரிந்தும் அவர் தம் இரு பத்திரிகைகளிலும் இந்த நூலின் கடுமையான விமரிசனங்களை வெளியிட்டார்.

ஒரு சமயம் பிரேம் சந்த் அலகாபாத் சென்றிருந்த போது, அங்கு வசித்து வந்த கவி மகாதேவி வர்மாவைப் பார்க்கச் சென்றார். மகாதேவியின் வீட்டு வாசலில் அவரைப் பார்த்த மகாதேவியின் பணிப்பெண் அவரை ஏதோ சாதாரண ஆள் என்று நினைத்து மிடுக்காக "அம்மா வேலையா இருக்காங்க..." என்றாள்.

"நீ சும்மாத்தானே இருக்கே? உட்காரு கொஞ்ச நேரம் பேசிக்கிட்டிருக்கலாம்" என்றார் பிரேம் சந்த்.

பேச ஆள் கிடைத்து விட்டால் வேறென்ன வேண்டும், அவளுக்கு?

சுமார் ஒரு மணி நேரங்கழித்து மகாதேவி வர்மா வீட்டு வாசலுக்கு வந்த போது அங்கே வேப்பமரத்தடியில் போடப் பட்டிருந்த பெஞ்சியின் மேல் பிரேம் சந்த் உட்கார்ந்து கொண்டு அந்தப் பணிப்பெண், தோட்டக்காரன் இன்னும் வீட்டு வேலைக்காரர்கள் சிலர் ஆகியோருடன் சுவாரசியமாக உரையாடிக் கொண்டிருப்பதைக் கண்டார்.

பிரேம் சந்தைப் பாராட்டியே கட்டுரைகள் வெளிவந்து கொண்டிருந்த சமயத்தில், எழுத்தாளர் நந்ததுலாரே வாஜ்பேயி அவரை ஓரளவு கடுமையாக விமரிசித்து 1931-ம் ஆண்டில் ஒரு கட்டுரை எழுதினார். அதைப் படித்து விட்டு பிரேம் சந்த் அவருக்கு எழுதினார்.

"எல்லோருந்தான் பாராட்டுகிறார்கள். ஆனால் குறைகளைச் சுட்டிக் காட்டுகிறவர்கள் கிடைப்பதில்லை. உங்களுக்கு மிக்க நன்றி. நீங்கள் எனக்கு மிகவும் உபகாரம் செய்திருக்கிறீர்கள்."

**(உருது மொழியில் மிகச் சிறந்த இலக்கியவாதியாகப் புகழ்பெற்று, அதன் பின் ஹிந்தி மொழிக்கு வந்தவர் முன்ஷி பிரேம் சந்த். (1880- 1936). இந்திய விடுதலைப் போரில் தீவிரமாக ஈடுபட்ட துணிச்சல் மிக்க பத்திரிகையாளராகவும் திகழ்ந்தார். பள்ளிக்கூட ஆசிரியராக வாழ்க்கையைத் தொடங்கி கடைசி வரை பொருளாதாரத் தளையிலிருந்து விடுபட முடியாமலே மறைந்த பிரேம் சந்த் வாழ்க்கையைத் தமிழில் தருகிற நூல் 'பேனா வீரர் பிரேம் சந்த்.' சு. கிருஷ்ணமூர்த்தி எழுதி 1989 ஆம் ஆண்டுக்கான இலக்கியச் சிந்தனைப் பரிசு பெற்ற நூல் இது. விலை ரூ. 35. வெளியீடு வானதி பதிப்பகம், சென்னை - 17)**

- சுப்ர.பாலன்

இன்றைய உங்கள் சேமிப்பில்
ஒவ்வொரு சிறுதுளியும்
பெருங்கடலாக மாறும்.



# சக்தி பைனான்ஸ் அறிவிக்கிறது 1% கூடுதல் வட்டி.

~~14% லிருந்து~~

# 15% வட்டி.

29.7.91லிருந்து உங்கள் புதிய, மற்றும்
புதுப்பிக்கும் டெபாசிட்டுகளுக்கு மட்டும்

---

ஆண்டுகள் ஆறு - கோடிகள் நூறு!

---

## சக்தி பைனான்ஸ் லிமிடெட்

பதிவு அலுவலகம் : 475, டாக்டர் நஞ்சப்பா சாலை கோயம்புத்தூர்-641 018
டாக்டர் நா. மகாலிங்கம் - தலைவர்

UIPC:SF:12:91



சக்தி பைனான்ஸ் - ரூ.400 கோடி பெருமதிப்புள்ள "சக்தி" குழுவின் ஓர் அங்கம்

# வாடகை வீடுகளும் வேதனைக் கோடுகளும்

**வீ**ட்டுச் சொந்தக்காரர்களைக் கேட்டால், குடியிருப்பவர்கள் பற்றிப் புகார்ப் பட்டியல் ஒப்பிப்பதும், குடியிருப்பவர்களைக் கேட்டால், வீட்டுக்காரரைப் பற்றிப் புலம்புவதும் சகஜம்.

மாம்பலம்வாசியான லட்சுமணன் தினமும் பத்து மணிக்குள் வீடு திரும்பி விட வேண்டும் என்ற அவரது வீட்டுக்காரரின் கட்டளைக்குக் கட்டுப்பட்டே ஆக வேண்டும். மாடியில் குடியிருக்கிறார் லட்சுமணன். வீட்டுக்காரர் வசிக்கும் கீழ்ப் பகுதியில் உள்ள வராந்தாவில்தான் மாடிப் படி. வீட்டுக்காரர் தாம்தான் இரவில் கதவைப் பூட்டிச் சாவியை வைத்துக் கொள்ள வேண்டும் என்பார். அதே சமயம் லேட்டானால் அவரை எழுப்பிக் கதவைத் திறக்கச் சொல்லித் தொந்தரவு செய்யக் கூடாது என்றும் கண்டிஷன் போடுவார். டூப்ளிகேட் சாவியைக் கேட்டால், தொலைந்து போய் விட்டது என்பார். இரட்டைச் சாவியுடன் புதிய பூட்டு வாங்கி வருவதாக லட்சுமணன் சொன்னால், 'வீட்டுச் சாவியைத் தலைக்குத் தலை வைத்துக் கொள்ளக் கூடாது' என்பார். விளைவு? பத்திரிகை ஆபீஸில் பணியாற்றும் லட்சுமணன் வீட்டுக்கு வெளியிலேயே திண்ணையில் அடிக்கடி படுக்க நேர்கிறது. அதைப் பற்றி வீட்டுக்காரர் கொஞ்சமாவது கவலைப்பட வேண்டுமே? ஊஹூம்!



"**வீ**டு பார்க்கப் போகும் போது தண்ணீர்ப் பிரச்னை இல்லை என்பார்கள். ஆனால் குடி போன பின்தான் தெரியும் எவ்வளவு தட்டுப்பாடு என்று" என்கிறார் சரசுவதி. காலையில் ஒரு மணி நேரம் மோட்டார் போடுவார்கள். ஆனால் மாலையில் அவர்களுக்குத் தேவையிருந்தால் மட்டுமே போடுவார்கள். நமக்குத் தேவையெனில், 'ஏன் காலையிலேயே பிடித்து வைத்துக் கொள்ளவில்லை?' என்பார்கள். அதிசயமாக நம் வீட்டுக்கு எப்போதாவது உறவினர்கள் வந்து இரண்டொரு நாள் தங்கியிருந்தால் போதும், அத்தனை பேரும் குளிப்பதற்காக மோட்டார் போட்டுப் போட்டு 'கரண்ட் பில் எக்கச்சக்கமா வருதே!' என்றெல்லாம் மறைமுகமாய்ச் சொல்லிக் காட்டுவார்கள், நம் காதுபட!

"கதவைத் திறந்து மூடும் போது, சப்தம் வரக் கூடாது. குழந்தைகள், சப்தமெழுப்பும் விளையாட்டுப் பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடக் கூடாது. உரக்க ரேடியோ, டீவி வைக்கக் கூடாது...' என்று வீட்டுக்காரர்கள் போடும் கண்டிஷன்கள் ஏராளம். ஆனல் இதில் ஒன்று கூட அவர்களுக்குக் கிடையாது. காரணம் அவர் வீட்டுக்காரர்; நாங்கள் குடியிருப்பவர் தானே!" என்று வேதனைக் கோடுகள் முகத்தில் தெரியச் சொல்லுகிறார் தட்சிணாமூர்த்தி.

**நா**ம் சந்தித்த குடித்தனக்காரர்கள் பலரும் சொன்ன பிரச்னைகளின் பட்டியல் இது :

●● வாடகையை இஷ்டம் போல உயர்த்துவது; என்ன, ஏது என்று கேட்டால் வீட்டைக் காலி செய்யச் சொல்லுவது.

●● வாடகைக்கும் சரி. அட்வான்சுக்கும் சரி ரசீது கொடுப்பதில்லை.

●● தனி மீட்டர் இல்லாத வீடுகள் என்றால், மின்சாரச் சாதனங்களை உபயோகித்துக் கொள்ள ஏகப்பட்ட கண்டிஷன்கள்.

●● எட்டு மாதம், பத்து மாத வாடகையை அட்வான்சாகக் கேட்பது.

●● நான்கைந்து குழந்தைகளைக் கொண்ட குடும்பத்திற்கு ஏராளமாகத் தண்ணீர் செலவாகும் என்பதால் அந்தக் குடும்பத்திற்கு வீட்டை வாடகைக்கு விடப் பலரும் யோசிப்பார்கள்.




●● சில ஒண்டுக் குடித்தன வீடுகளில் குடியிருப்பவர்கள் மாலையில் இரண்டாவது முறை குளிப்பதற்கு வீட்டுக்காரரிடம் அனுமதி கிடைக்காது. அப்படியே குளிக்க அனுமதி கிடைத்தாலும் அதற்கு ஸ்பெஷலாக ஒரு கட்டணம் செலுத்த வேண்டியிருக்கும்.

''விலைவாசி ஏறிக் கொண்டே போனால், வாடகையை உயர்த்த வேண்டியது அவசியமாகிறதில்லையா? ஒரு முறை, நான் வாடகையை ஐம்பது ரூபாய் உயர்த்திய போது, என் வீட்டில் குடியிருந்த இஞ்சினியர் 'என்ன சார்! வீட்டில் அதிகப்படியாய் எந்த வசதியும் செய்து கொடுக்காமல், வாடகையை அதிகமாக்கி விட்டீர்கள்?' என்றார். அதற்கு என் அப்பா, 'போன வருஷம், பார்த்த அதே வேலையைத் தானே உங்கள் ஆபீசில் இப்போதும் பார்க்கிறீர்கள்! அப்புறம் எதற்கு உங்களுக்கு அதிகப்படி பஞ்சப்படி? இன்கிரிமெண்ட்? ஒரு கிலோ அரிசி போன வருஷம் என்ன விலை? இந்த வருஷம், அதே அளவு அரிசியை ஏன் அதிக விலை கொடுத்து வாங்குகிறீர்கள்?' என்று பதில் கேள்வி கேட்டதும், வாயை மூடிக் கொண்டார்...'' என்கிறார் சுந்தர மூர்த்தி என்ற அரசு அதிகாரி.

பிரச்னை எதுவுமின்றி, முதல் தேதியானால், டாண் என்று வாடகை செக் வந்து விடும் என்று பலரும்' வங்கிகளுக்கும், கம்பெனிகளுக்கும் குத்தகைக்கு விடுவது இப்போது அதிகரித்து வருகிறது. தினசரிகளிலும், இதற்கான விளம்பரங்கள் நிறைய வருகின்றன. அப்படி பாங்க் அதிகாரிக்கு குத்தகைக்கு விடப்பட்ட ஃப்ளாட் ஒன்றுக்குச் சொந்தக்காரரான திருமதி. ஜெயலட்சுமி வெங்கட்ராமனின் கசப்பான அனுபவம் இது. ''ஒராண்டு கால லீஸ் முடிவடைந்த போது, வாஷ்பேசின், சமையலறை சிங்க், ஜன்னல் கண்ணாடிகள் என்று பலவும் உடைந்து போயிருந்தன. பல புகார்கள் எழுதியும் நஷ்ட ஈடும் தரப்படவில்லை'' என்கிறார் அவர்.

வீடு பார்த்துக் கொடுக்க இன்று பெரிதும் நாடப்படுபவர்கள் தரகர்கள்தான். தரகருக்கு, வழக்கமாய் ஒரு மாத வாடகை, தரகாகக் கொடுக்க வேண்டும். வீட்டுக்காரரும் 'ஏதோ... பார்த்து'க் கொடுப்பதுண்டு.

ஆனால், இப்படிப்பட்ட தரகர்களையும் ஏமாற்றத் தெரிந்த இல்லாடிகளும் இருக்கத்தான் செய்கிறார்கள். ''எங்களிடமிருந்து, விவரங்களைப் பெற்றுக்கொண்டு, அல்லது, எங்களுடன் வந்து வீட்டைப் பார்த்து விட்டுப் போவார்கள் சிலர். ஆனால் இவர்களுக்கு வீடு தேவைப்படாது. வீட்டைப் பார்த்து விட்டு, வீடு தேடிக் கொண்டிருக்கும் நண்பரிடம் விவரம் சொல்ல, அவர் நேரிடையாய்ப் போய், வீட்டைப் பேசி முடித்துக் கொள்வார். எங்களுக்குக் கமிஷன் ஏதும் கிடைக்காது. இப்படி ஏமாந்த அனுபவம் எங்களில் பலருக்கு நிறைய உண்டு'' என்கிறார் தரகர் சீதாபதி.

இவை ஒருபுறம் என்றால், மறுபுறம் சட்டம் என்ன சொல்லுகிறது? சுருக்கமாகக் கூறுகிறார் வழக்கறிஞர் பாக்யலட்சுமி.

●● சட்டப்படி ஒவ்வொரு வீட்டுக்குச்

## அடுத்த இதழில்...

●● மக்கள் கலைஞருக்கு மாபெரும் விருது !
- சிறப்புக் கட்டுரை

● வீடுகளுக்கு வண்ணங்கள் ; தேடுகிற உள்ளங்கள் !
- கவர் ஸ்டோரி

சொந்தக்காரரும் ஒவ்வொரு வாடகைதாரரும் வீட்டைக் காலி செய்த ஏழு நாட்களுக்குள் அரசுக்கு அது பற்றி அறிவிக்க வேண்டும். வீடு காலியான அறிவிப்புத் தரப்பட்டுப் பத்து நாட்களுக்குள், அரசு அதிகாரி, அந்த வீடு அரசு உபயோகத்துக்குத் தேவைப்படுவதாகத் தெரிவிக்கவில்லையெனில், நிலச் சொந்தக்காரர் வேறு யாருக்காவது வீட்டை வாடகைக்கு விடலாம்; அல்லது சொந்த உபயோகத்துக்கு வைத்துக் கொள்ளலாம்.

●● சொந்தக்காரரே, வீட்டைப் பழுது பார்க்கலாம். இல்லையெனில் வாடகைதாரரே பழுது பார்த்து விட்டுச் செலவை வாடகைப் பணத்திலிருந்து கழித்துக் கொள்ளலாம்.

●● சொந்தக்காரர் அல்லது, வாடகைதாரரின் மனுவின் பேரில், சம்பந்தப்பட்ட அரசு அதிகாரி, நியாய வாடகையை (fair rent) நிர்ணயிக்கலாம். நிர்ணயிக்கப்பட்ட வாடகைக்கு அதிகமாக வாடகை வசூலிக்கச் சொந்தக்காரருக்கு உரிமை இல்லை.

●● சொந்தக்காரர்கள் தாம் வசூலித்த வாடகைக்கு ரசீது கொடுத்தாக வேண்டும். சொந்தக்காரர் நிர்ணயிக்கப்பட்ட வாடகைத் தொகையை வாங்கிக் கொள்ள மறுக்கும் பட்சத்தில், வாடகையை அவருடைய வங்கிக் கணக்கில் நேரடியாய்ச் செலுத்தலாம்; அல்லது மணி ஆர்டர் மூலம் அனுப்பலாம். அப்படியும் சொந்தக்காரர் மறுத்தார் என்றால், வாடகைத் தொகையை சம்பந்தப்பட்ட அரசு அதிகாரியிடமே செலுத்தி, அதற்குரிய ரசீதைப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

●● காரணமின்றி, வாடகைதாரரை வீட்டைக் காலி செய்ய வைக்க முடியாது. ஒப்பந்தம் ஏதுமிருப்பின், அதன்படி வீட்டைக் காலி செய்யச் சொல்லலாம். இல்லையெனில், தக்க காரணத்துடன் சம்பந்தப்பட்ட அதிகாரியிடம் விண்ணப்பிக்க வேண்டும். அவர் அதை ஆராய்ந்து அனுமதி தரவோ, மறுக்கவோ செய்யலாம்.

சட்டங்கள் நூறு இருந்தாலும் அவற்றை அமுல்படுத்த வக்கீல், நீதிமன்றம் என்று அலைய நேரம் எங்கே இருக்கிறது? பணச் செலவுதான் எவ்வளவு ஆகும்? எனவே சட்டத்தை எடுத்துக்காட்டுவதுடன் நிறுத்திக் கொண்டு ஒருவருக்கொருவர் கூடியமட்டில் அனுசரணையாகப் போவது தான் நல்லது. சட்டம் பேசுவது கடைசிக் கட்டமாக இருக்கட்டும்.

கருத்துத் தொகுப்பு :
எஸ். சந்திரமௌலி

யோசனை கூறிய வாசகர் :
எஸ். காந்திராஜ், மதுரை.

## கல்கி பொன் விழா ஆண்டு பொன் நகைப் பரிசுப் போட்டி - 1 (முடிவு)

### சரியான விடைகள் :

*1. ராக்கோடி, 2. பட்டம்கட்டி அல்லது தலைசாமான், 3. சந்திர, சூரிய பிரபைகள், 4. தோடு அல்லது கம்மல், 5. ஜிமிக்கி, 6. மாட்டல், 7. தாடங்கம், 8. தொங்கட்டான் அல்லது டோலாக்கு, 9. மோதிரம், 10. தங்க நெளி மோதிரம், 11. கல் இழைத்த நெளி மோதிரம், 12. ஜட நாகம், 13. திருகுப்பூ அல்லது ஜடைவில்லை, 14. நாகொத்து, 15. மூக்குத்தி, 16. நத்து, 17. புல்லாக்கு, 18. அட்டிகை, 19. காரை, 20. மகரிப் பதக்கம் அல்லது மகர கண்டி மாலை, 21. காசு மாலை, 22. ஜடை குச்சு அல்லது குஞ்சலம், 23. ஒட்டியாணம், 24. வங்கி, 25. முத்து வளை, 26. கைக் கொலுசு, 27. கங்கணம் அல்லது தோடா, 28. பாட்லி, 29. சாவிக் கொத்து.*

*மேற்படி 29 நகைகளுள் 27 நகைகளின் பெயர்களைச் சரியாக எழுதி, ஒரு சவரன் பெறுமானமுள்ள பொன் நகை பரிசு பெறுபவர் :*

*தே நடராஜன், 2-2-1137/4/A, நியூ நல்லகுண்டா, ஹைதராபாத் - 500 044.*


தங்கம் பொங்கும்
11 ஆம் ஆண்டு



கவுந்து போ...
தமிழ்திருவன் யாருன்னு பாரு!
சோனியா அமெரிக்க பயணம்
கச்சத் தீவை மீட்போம்!
மாநில அரசின் அதிகாரங்கள்
அய்யோ, அமெரிக்கா போயிட்டாங்களே... நம்ம பொழைப்பு என்ன ஆறது...?
நரசிம்மராவுக்கு எப்படி டாடா காட்றது...?
திரும்பி வர்றதுக்குள்ள... எப்படியும் வளைச்சுப் போட்டுடலாம்!
வளைச்சுப் போட்டாலும் தானே நமக்கு ஆதாயம்!



# கல்கி



1991
செப்டம்பர் 1
மலர் : 50
இதழ் : 5
பிரஜோத்பத்தி
ஆவணி 16

## முக்கோணல் !

முதல் கோணலுக்குப் பிறகு (தாமரைக்கனி - பண்ருட்டி விவகாரம்) முக்கோணல் சாதனை புரிந்திருக்கிறார் முதல்வர் ஜெயலலிதா. சுதந்திர தினப் பேச்சில் 'கச்சத் தீவுகளை மீட்போம்' என்று அவர் சொன்னது, அறியாமையினால் இருக்க முடியாது. ஜெயலலிதா நன்கு படித்தவர், விஷயஞான முள்ளவர். மாநில அரசின் அதிகார எல்லைகளை உணராதவர் அல்ல. அப்படி இருக்க, அவர் இவ்வாறு வரம்பு மீறியது, மத்திய அரசைச் சீண்டி விடவே என்பதாகக் கருதப்படும். முக்கியமாகக் காவிரி நீர்ப் பிரச்னையில் மத்திய அரசின் போக்கு முதல்வருக்குத் திருப்தி அளிக்காததால் அவர் இப்படி மத்திய அரசுக்குச் சவால் விடுவது போலப் பேசியிருக்கிறார் என்பதாக எண்ண இடம் தரும். இதுபோன்ற விஷயங்களில் நிதானமும் முன்னெச்சரிக்கையும் தேவை. இங்கே இருப்பது மிகப் பெரும்பான்மை பலம் பெற்ற அரசு என்பதும் மத்தியில் ஆள்வது ஒரு மைனாரிட்டி அரசு என்பதும் உண்மையே. ஆனால் மத்திய அரசின் அதிகாரங்கள் அபரிமிதமானவை. இங்கே மெஜாரிடி பலம் பெற்ற ஒரு தி. மு. க. அரசை டிஸ்மிஸ் செய்தது ஒரு மிகப் பலவீனமான சந்திரசேகர் ஆட்சிதான் என்பதை மறக்கக் கூடாது.

சிதம்பரம் - அருணாசலம் விஷயத்தில் தமது அணுகுமுறை தவறாகப் போயிற்று என்பதை இதற்குள் முதல்வர் உணர்ந்திருந்தால், எதிர்காலத்துக்கு ஒரு படிப்பினையாக அது இருந்து உதவும். காவிரி நீர் விவகாரத்தில் தமிழகத்தின் உரிமைகள் காக்கப்பட வேண்டும் என்ற அடிப்படையில் யாருக்குமே கருத்து வேற்றுமை கிடையாது. எப்படி அதை அடைவது என்பதில்தான் கருத்து வேற்றுமை. அவ்வாறிருக்க, சிதம்பரம் - அருணாசலத்தைத் 'துரோகிகள்' என்றும், 'தமிழர்கள் மன்னிக்க மாட்டார்கள்' என்றும், 'அ. தி. மு. க. வினர் அவர்களைப் பகிஷ்கரிப்பார்கள்' என்றும் முதல்வர் பேசியிருக்க வேண்டியதில்லை. அவ்வாறு பேசிய பிறகு அவரது கட்சிக்காரர்கள் கையைக் கட்டிக் கொண்டு சும்மா இருப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. கைவரிசையைக் காட்டிவிட்டார்கள். அதன் பிறகு அ. தி. மு. க. வினருக்கும் நடந்த வன்முறைக்கும் சம்பந்தமில்லை' என்று முதல்வர் கூறுவது முழுப் பூசணிக்காய் கதை எனில், 'ப. சிதம்பரமும் உடன் சென்ற காங்கிரஸ்காரர்களும் தாங்களே கார்களை அடித்து நொறுக்கினார்கள்' என்றும் பேசுவது முதல்வரின் கௌரவத்துக்கு ஏற்றதல்ல. வாழப்பாடியாருக்குப் பாராட்டு விழா நடந்த போது அவர் கோரிக்கையைப் பெருந்தன்மையுடன் ஏற்று, முதல்வர், பகிஷ்காரத்தை வாபஸ் பெறுவதாகக் கூறியிருந்தால், இந்த அசம்பாவிதங்கள் நிகழ்ந்திராது. முதல்வரின் மதிப்பும் உயர்ந்திருக்கும். ஆனால் இப்போதோ, 'மத்திய அமைச்சருக்கு மாநில அரசு பாதுகாப்பு வழங்கத் தவறிவிட்டது' என்ற அவப் பெயரே மிச்சம்.

ஆளுனர் அளித்த சுதந்திரதின விருந்தில் சிதம்பரத்தைப் பல பெண் எம். எல். ஏக்கள் சூழ்ந்து கொண்டு அவரை முதல்வர் எதிரிலேயே பரிகசித்துப் பேசியிருப்பது, சிதம்பரத்துக்கு அல்ல, முதல்வருக்கே அகௌரவம். முதல்வர் அந்த எம். எல். ஏக்களை உடனே அழைத்து, 'நல்லுறவு மலர அழைக்கப்பட்ட இடத்தில் கசப்புணர்வை வளர்க்காதீர்கள்' என்று கண்டித்திருக்கலாம். இந்த விவகாரங்களின் போதெல்லாம் ப.சி. அசாதாரணமான பொறுமையுடன் நடந்து கொண்டு, நற்பெயரைத் தட்டிக் கொண்டு போய் விட்டார். ஒரு வழியாக, 'இனி கறுப்புக் கொடி ஆர்ப்பாட்டமெல்லாம் வேண்டாம்' என்று முதல்வர் சொன்ன கட்டத்திலும் வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவது போலவே பேசியிருக்கிறார் ; காயத்தை ஆற்றும் விதத்தில் அல்ல.

தம்மைத் தேர்ந்தெடுத்த பர்கூர் தொகுதிக்கு முதல்வர் செல்ல வேண்டும்தான். அதற்காக ஆயிரம் கார்களா! அதுவும் பெட்ரோல் விற்கும் விலையில் ! 'சிக்கனமே நாட்டைக் காக்கும்' என்று மத்திய நிதி அமைச்சர் நாள் தவறாமல் சுட்டிக் காட்டி வரும் வேளையில் ! இது மூன்றாவது கோணல். ஜான்ஸி ராணி போன்ற பட்டங்களாலும் அரசுச் செலவில் நாளிதழ்களில் தரப்படும் பக்கம்பக்கமான விளம்பரங்களாலும் 'ஜெ'யின் இமேஜ் வளர்க்கப்படலாம்; தமிழகத்துக்குப் பயனில்லை. பர்கூர் தொகுதியில் முதல்வரை வரவேற்கக் கூடிய கூட்டம் மலைக்க வைப்பது. மக்களின் இந்தப் பேராதரவை முதல்வர் ஆக்கபூர்வமாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இதற்கு முதலில் அரசியல்வாதி என்ற நிலையிலிருந்து ராஜதந்திரி என்ற நிலைக்கு அவர் உயர வேண்டும்.

# தி மயிலாப்பூர் இந்து சாசுவத நிதி லிமிடெட்


**பதிவு அலுவலகம்**

நெம்பர்கள் 32-33, தெற்கு மாட வீதி
மயிலாப்பூர், சென்னை - 600 004.
போன் : 71099, 71230

(ஸ்தாபிதம் 1872)

கிளைகள் : 207, தங்கசாலை தெரு, பார்க் டவுன், சென்னை - 600 003.
528, திருவொற்றியூர் நெடுஞ்சாலை, வண்ணாரப்பேட்டை, சென்னை - 600 021.
11, ஜோன்ஸ் சாலை, சைதாப்பேட்டை, சென்னை - 600 015.
308, பூந்தமல்லி நெடுஞ்சாலை, அமைந்தகரை, சென்னை - 600 029.
95, பலகை வாராவதி சாலை, அடையார், சென்னை - 600 020.


## 9.8.1991 முதல்

## பிக்செட் டெபாசிட் (FIXED DEPOSIT)

3 மாதங்களுக்கு 12 % வட்டி
6 மாதங்களுக்கு 14 % வட்டி
1 வருடத்துக்கு 15 % வட்டி
2 வருடங்களுக்கு 16 % வட்டி
3 வருடங்களுக்கு 17 % வட்டி

## மறு முதலீடு திட்டம் (RE-INVESTMENT DEPOSIT)

| டெபாஸிட் தொகை | மாதங்கள் | | | | |
|---|---|---|---|---|---|
| | 36 | 50 | 78 | 120 | 180 |
| ரூ. 1000 | ரூ. 1,660 | ரூ. 2,020 | ரூ. 3,000 | ரூ. 5,420 | ரூ. 12,640 |

## பணப் பத்திரங்கள் (CASH CERTIFICATES)

இன்றே ரூ. 728/- ஐ எங்கள் பணப் பத்திரங்களில் முதலீடு செய்து 24 மாதங்கள் கழித்து ரூ. 1000/- ஐ பெற்றுக்கொள்ளுங்கள்.

## ரெக்கரிங் டெபாசிட்டுகள் (RECURRING DEPOSITS)

| டெபாஸிட் தொகை | மாதங்கள் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
| ரூ. 10 | ரூ. 130 | ரூ. 280 | ரூ. 456 | ரூ. 650 | ரூ. 860 | ரூ. 1,100 |

## சேவிங்ஸ் டெபாசிட் (SAVINGS DEPOSIT)

9% வட்டி

மற்ற விவரங்களுக்கு செயலாளருக்கு விண்ணப்பிக்கவும்

M.K. பாலன், M.L.A.,
தலைவர்

T.M. சண்முகம்
துணைத் தலைவர்

R. சம்பந்தம்
ஆக்டிங் செயலாளர்

(பங்குதாரர்களுக்கு மட்டும்)

# கார்பசேவ் கற்றுத் தந்த பாடம்



மூன்று நாட்கள்தான் என்றாலும் கார்பசேவுக்கு ஏன் பதவி பறி போயிற்று? பிற நாட்டுத் தலைவர்களுக்கு அப்படி ஒரு நிலை நேராமல் இருக்க என்ன செய்ய வேண்டும்?

● அவர் கறுகறுப்பாக இயங்கினார்.

●● ஆகவே தலைவர்கள் கொஞ்சம் கறுகறுப்பை (அப்படி ஏதாவது இருக்குமானால்) குறைத்துக் கொள்ள வேண்டும்.

● அமைதிப் பணிக்காக அவர் நோபல் பரிசு பெற்றார்.

●● எனவே தேசத் தலைவர்கள் அண்டை, அயல்நாடுகளுடன் விரோதங்களை வளர்த்துக் கொள்வதுடன் கூடுமான வரை, உள்நாட்டிலும் அமைதி இல்லாமல் பார்த்துக் கொள்வது நல்லது. (ஏற்கெனவே அமைதியாக உள்ள இடங்களில் கலவரங்கள் தோன்றச் செய்வது இன்னும் வரவேற்கத்தக்கது.)

● பொருளாதாரச் சீர்திருத்தங்கள் செய்யத் தொடங்கினார்.

●● மாபெரும் தவறு. நாட்டிலுள்ள எல்லாப் பொருளாதார நிபுணர்களையும் வேலையிலிருந்து நீக்கிவிட வேண்டும். அல்லது வேலை கொடுத்தாக வேண்டும் என்றால் டீ. வி. நிலையத்தில் நாலைந்து நாற்காலிகளைப் போட்டு அமர வைத்து, மணிக்கணக்கில் பொருளாதார அரட்டை அடிக்கட்டும். (நாம் ஆஃப் செய்துவிட்டுத் தூங்கி விடலாம்.)

● ரஷ்யாவில் பொருளாதார நெருக்கடி, பண்டங்கள் பற்றாக்குறை, தொழிலாளர் அதிருப்தி இவற்றை உலகம் தெரிந்து கொள்ளும்படி செய்தார். அமெரிக்கா போன்ற நாடுகளிடம் உதவி கோரினார்.

●● மகாத் தப்பு. நம்ம வியாதிகள் பிறருக்குத் தெரியக் கூடாது. முக்கியமாக டாக்டர்களுக்குத் தெரியவே கூடாது. பண்டங்கள் பற்றாக்குறையா, மக்கள் செத்து மடிந்தாலும் பாதகமில்லை. வெளியே காட்டிக் கொள்ளாதீர்கள். எந்த நாட்டிலிருந்தும் இறக்குமதி பண்ணி விடாதீர்கள்.

● அணு ஆயுதம், ஏவுகணை, முதலான ஆயுதங்களைக் குறைப்புச் செய்தார். (அல்லது குறைப்பதற்கு ஒப்புக் கொண்டார்.)

●● உலகின் பல்வேறு நாடுகளும் கோதுமையும் அரிசியும் விளைவித்துக் கொண்டிருப்பதைக் கைவிட்டு எல்லாக் கிராமங்களிலும் நகரங்களிலும் ஆயுதங்களை உற்பத்தி செய்ய வேண்டும். ஏவுகணை, அணுகுண்டு இவற்றை நிறையத்

விஷ்ராம்

● தனி நாடு கேட்டுப் போராடிக் கொண்டிருந்த சில மாநிலங்களை அமைதிப்படுத்தப் புதிய ஒப்பந்தம் தயாரித்துக் கொண்டிருந்தார்.

● கிரிமியா என்ற ஊரில் ஓய்வு எடுக்கப் போனார்.

● கிழக்கு ஐரோப்பாவில் இருந்த கம்யூனிச நாடுகள் மீது ரஷ்யாவுக்கு இருந்த பிடியைத் தளர்த்தி, அவை சுதந்திரமடையச் செய்தார்.

● உடல்நிலை காரணமாக நீக்கப்பட்டதாகவே காரணம் கூறப்பட்டது.

தயாரித்துக் கொண்டே இருக்க வேண்டும்.

●● அந்தக் கதையே வேண்டாம். பிரிவினைவாதிகளுடன் பேச்சு வார்த்தை என்ற பேச்சுக்கே இடமில்லை. எல்லாரையும் நசுக்கவே முயற்சி செய்ய வேண்டும். இதனால் குண்டடி பட்டு அப்பாவி மக்கள் பலர் உயிர் துறக்க நேர்ந்தாலும் பாதகமில்லை.

●● அடக் கடவுளே, தலைநகரில் உள்ள நாற்காலியை விட்டு ஓர் அங்குலம் அந்தப் பக்கம், இந்தப் பக்கம் நகரலாமோ? ஓய்வாவது, வெண்டைக்காயாவது?

●● ஆகவே, யாருக்கும் எந்தவிதச் சுதந்திரமும் தருவது நல்லதல்ல.

●● உடல்நிலை ரொம்ப முக்கியம். அது மோசமாயிருந்தாலும் கூட வெளியே காட்டிக் கொள்ளக் கூடாது. படுத்த படுக்கையாக இருக்கும்போதும் கூட,'தலைவர் இன்று தண்டால் எடுத்தார்; கரளாக்கட்டை சுழற்றினார்; ஜாகிங் போனார்' என்று செய்தி தினமும் நாளிதழ்களில் வரவேண்டும்.

## சசின் டெண்டுல்கர்:

# கிரிக்கெட்டின் மொத்தத் திறமையும் இவரிடம்!

"நீ சதம் போட்டு, உன் அணி வென்றபின் திறக்கப்பட்ட 'ஷாம்பேன்' எப்படி ருசித்தது...?" - இந்தக் கேள்வியை சசின் டெண்டுல்கரிடம் நிருபர்கள் கேட்ட போது அவர் சொன்ன பதில் இதுதான் :

"மன்னிக்கவும். நான் எந்த வகை மதுவையும் இதுவரை ருசித்ததில்லை."

நிருபர் விடாமல் மதுவின் ருசியைப் பற்றித் துருவ, 'ஒரு வேளை அந்த ருசி எனக்குப் பிடித்துப் போய் விட்டால் என் கிரிக்கெட் என்ன ஆவது!' என்று பதில் கூறினார் சசின்.

இதர உலக நாடுகள் அணி இங்கிலாந்து அணியை வென்ற தருணத்தில்தான் சசினிடம் இவ்வாறு கேட்கப்பட்டது. மத்தியதரக் குடும்பத்தைச் சேர்ந்த இந்த இளைஞர், பெற்றோரின் சிறப்பான வழிகாட்டலாலும் சுயமான நல்லியல்புகளாலும் கட்டுப்பாடுகளைத் தளர்த்தாமல் வைராக்கியத்துடன் இருக்கிறார்.

இத்தனைக்கும், பதினெட்டே வயதான சசின் டெண்டுல்கரின் வாழ்க்கையில் நிலை தடுமாறுவதற்கான சந்தர்ப்பங்கள் அதிகம் - உலகளாவிய புகழ்; மாதம் 20,000 ரூபாய் சம்பளத்தில் மக்கள் தொடர்பு மேலாளர் பதவி; அவரது கிரிக்கெட்டிலும் இளமையிலும் கிறங்கிப் போய் வழிபடும் கல்லூரிப் பெண்கள் கூட்டம்...

ஆனால் டெண்டுல்கரின் மனமெல்லாம் கிரிக்கெட்டின் ஆக்கிரமிப்பு. "எனக்குக் கிரிக்கெட் இருந்தால் போதும். காதல், கல்யாணம் எல்லாம் இன்னும் வெகு தொலைவில்" என்கிறார். ஓயாமல் போன் செய்து தொந்தரவு கொடுக்கும் பெண் ரசிகர்களைச் சமாளிப்பது இவருடைய அண்ணன் தானாம்.

சசின் பதினெட்டாவது வயதை எட்டுவதற்காகக் காத்திருந்த மஃபத்லால் நிறுவனம் அவரைக் கொத்திக் கொண்டு போய் விட்டது! இத்தனைக்கும், கிரிக்கெட் நிமித்தமாக ஓயாமல் ஊர் ஊராகச் சென்று கொண்டிருந்ததால், இவர் எஸ். எஸ். எல். சி. கூடத் தேறவில்லை! மதியம் இரண்டு மணிவரைதான் சசினுக்கு அலுவலகத்தில் வேலை. அதற்குப் பிறகு இருட்டுகிறவரை கிரிக்கெட் பயிற்சி...

"நான் படித்துக் கொண்டிருந்த காலத்தில் ஒவ்வொரு நாளும் பன்னிரண்டு மணி நேரம் 'பிராக்டிஸ் செய்வேன். ஆட ஆடத்தான் திறமை வளரும்; கொஞ்சம் அதிர்ஷ்டமும் வேண்டும்" என்கிறார் சசின். ஓய்வு என்பதே இவர் அகராதியில் இல்லையோ என்று எண்ணுகிற அளவுக்குச் சுறுசுறுப்பு.

சசினைக் 'கிரிக்கெட்டின் மொத்தத் திறமையும் ஒருங்கே கொண்ட தனிப் பிறவி' என்று இங்கிலாந்து பத்திரிகையாளர்கள் வர்ணித்துள்ளனர். யாரையும் இலேசில் பாராட்டாத சுனில் காவஸ்கர் கூட, 'அவன் வயதில் நான் இருந்ததைக் காட்டிலும் சசின் அதிகத் திறமை வாய்ந்தவனாயிருக்கிறான்' என்று ஒப்புக் கொண்டிருக்கிறார்.

டெஸ்ட் கிரிக்கெட், ஒரு நாள் கிரிக்கெட் என்று மாறி மாறி ஆடுவது கடினமாக இல்லையா? என்று சசினிடம் கேட்டால், "இதில் ஒரு சிரமமும் இல்லை. நான் வேகமாக ஆடுபவன். விதவிதமான ஸ்ட்ரோக்குகள் ஆடவும் விரும்புபவன். இரண்டு வகை கிரிக்கெட்டிலும்



எனக்கு வாய்ப்புகள் உள்ளன" என்கிறார்.

"எதிர்காலக் கிரிக்கெட் எப்படியிருக்கும்?"

"நல்ல ஃபீல்டர்கள் உள்ள அணிகள்தான் எதிர்காலத்தில் முன்னணியில் இருக்கும். அதனால்தான் நான் என் ஃபீல்டிங்கை மேலும் மேம்படுத்த முயற்சிகள் செய்து வருகிறேன்."

இவ்வாண்டு இறுதியில் இங்கிலாந்துக்கு எதிரான சுற்றுப்பயணம் இருப்பதை நினைவூட்டுவது போல் சசின் டெண்டுல்கரின் உடலில் ஒரு துள்ளலும் பார்வையில் ஒரு மின்னலும் காணப்படுகின்றன!

- ராஜீவி நரசிம்மன்.

டாக்டர் பதில்கள் :

# அல்சர் என்றால் என்ன?

O கே. எஸ். சுப்பிரமணி, சென்னை - 6.

**OO பூனை வளர்ப்பதால் வீட்டிலுள்ள வர்களுக்கு நோய்கள் ஏதேனும் வர வாய்ப்பு உண்டா? பூனை வளர்ப்பவர்கள் முன்னெச்ச ரிக்கையாக என்ன செய்ய வேண்டும்?**

O டாக்டர். பி. ஆர். சுப்ரமணியம், சென்னை - 18.

OO பூனையிடமிருந்து வரும் ஒருவித வாசனையால் அலர்ஜி ஏற்பட்டு, ஆஸ்த்துமா வர வாய்ப்பு உண்டு. (பிரிட் டிஷ் பிரதமராக இருந்த கிளாட்ஸ்டன் என்பவருக்குப் பூனையைக் கண்டாலே இதன் காரணமாக வெறுப்பும் அருவருப் பும் ஏற்பட்டிருந்ததாம்!) பூனை பிராண்டு வதால் அலர்ஜிக் ரியாக்ஷன் வரும்; உதாரணமாகக் கழலை வீங்கி, நெறி கட்டிக் கொள்ளும். காய்ச்சல் வரும். பிராண்டிய இடத்தில் காயாமல் சீழ்பிடித்துக் கொள் ளும் வாய்ப்பும் உண்டு.

O என். முருகேஷ், பெருஞ்சேரி.

**OO அல்சர் என்றால் என்ன? இது எதனால் ஏற்படுகிறது? இதன் அறிகுறிகள் என்ன?**

OO அல்சர் என்பது முற்றிய புண். இது உடலின் எந்தப் பகுதியிலும் வரும். கண்ணில் கார்னியல் அல்சர் தோன்றும். தோலில் காயம் பட்டுப் பிறகு அல்சர் ஆக மாறும். ஆசனத்தில் வரலாம். குடலில் வர லாம். வயிற்றில் அமிலச் சேர்க்கையால் வரலாம். முக்கியமான அறிகுறி; வலி.

O எஸ். ரமேஷ், மதுரை - 16.

**OO Embalment of body என்றால் என்ன?**

OO எந்த உடலும், இறந்த பிறகு, ரத்த ஓட்டம் இல்லாத காரணத்தால் அழுகி நாற்றம் ஏற்படும். அதைத் தடுப்பதற்கு ஆதி காலத்தில் எகிப்தியர்கள் சடலங்களை மம்மிஃபிகேஷன் என்ற முறையில் பாது காத்தார்கள். இன்றும், எகிப்தில் 'பிரமிட்' டுக்குள் அநேக ராஜபரம்பரை யைச் சேர்ந்த உடல்கள் காப்பாற்றப்பட்டு வருகின்றன.

இப்போது மருத்துவக் கல்லூரிகளில் படிக்கும் மாணவர்கள், பிணங்களை அறுத்து, உறுப்புக்களின் தன்மையை (அனாடமி) அறிய, சடலங்களை அழியா மல் காக்க வேண்டியிருக்கிறது. அதற்காக, உடலில் தமனிக்குள் ஓர் அழுத்தமான பம்ப் கொண்டு நாற்பது சதவிகிதம் ஃபார்ம லின் - ஐ உடல் முழுதும் பரவச் செய்கி றார்கள். அதிக நாள் உடலைக் காப்பாற்ற வேண்டிய நிலையில், உடலில் மேலும் நாற்பது சதவிகித ஃபார்மலின் பூசி விடு வார்கள்.

தொகுப்பு : எஸ். வி. என்.



# நாங்கள் வாழ வேண்டும்




எங்களுக்கு
உண்ண ஒருவேளை உணவு...
உடுக்க உடை...
கல்விச் செலவு...

**உங்களால் நிச்சயம் தர முடியும்... !**

## எப்படி ?

குழந்தைகள், ஆதரவற்ற பெண்கள், கைவிடப்பட்ட முதியோருக்கு அடைக்கலம் தரும் 'உதவும் கரங்கள்' அமைப்புக்கு தாராளமாக நிதி அளியுங்கள்!

எஸ். வித்யாகர்
*'உதவும் கரங்கள்'*
*460-சி, என்.எஸ்.கே. நகர்,*
*சென்னை -600 106.*

தொலைபேசி: 426141

Advt

# கம்ப்யூட்டர் கிராமம்

**5**



**ஆ**ரம்பாக்கம் என்கிற ஊருக்கு மின்சாரம் வந்து விட்டாலும் ட்ரான்ஸ் ஃபார்மர்களில் இறங்கி இறங்கிக் கடைசியில் 220 வோல்ட்டு 100 வோல்ட்டுக்கு வந்து விட்டதால் ஊரே அரிகேன் விளக்குப் போட்டாற் போலத் தோன்றியது. டோட்டு ஊளையிடத் தொடங்க, நாட்டு நாய்கள் இது யார் புதுசாக இருக்கிறதே என்று விசாரிக்க வந்தன. ப்ரமிளா தன் நாயை எடுத்து அணைத்துக் கொண்டாள். ஷண்பேகர் ராத்திரி படிக்க முடியாத கவலையுடன் ஓட்டல் வாசலில் இருந்த கடையில் மெழுகு வர்த்தி விசாரித்துக் கொண்டிருக்க, ப்ரமிளா வெறுமனே நின்று கொண்டிருந்தது மனோஜ"க்கு ஆத்திரமாக இருந்தது.

எதற்கு இத்தனை பெட்டி என்று கேட்க விரும்பவில்லை. இருக்கிறது ஒரே அறை என்று ஊர்ஜிதமாகி, ஷண்பேகர், ''கிராமத்



தில் டேக்கிதார் யாராவது வீட்டில் போய்ப் படுத்துக் கொள்கிறேன்; என்ஜாய் யுவர் ஹனிமூன்'' என்று சொல்லி விட்டுக் காணா மற் போய் விட்டான்.

அரையிருட்டில் நல்ல பசியிருந்தா லும் நாயர் கொண்டு வந்த சோறு உறைப் பாக இருந்ததால், ப்ரமிளா சாப்பிட வில்லை. டோட்டு முனகிக் கொண்டு இருந் தது. ஜுரம் என்றாள்.



இத்தனை அசௌகரியங்கள் இருந்தும் இருவரும் ஒருவரை ஒருவர் அணைத்துக் கொண்டுதான் தூங்கினார்கள்.

பம்பாயில் இல்லாத பறவைக் கானங் களும் கோழி கூவல்களும் ஒலிக்கக் காலைச் சூரியகிரணங்கள் அவர்களை எழுப்ப, வாசுதேவன் நாயர் காப்பி போட்டுக் கொண்டு வந்து கொடுத்தார். அதை வாங்கிக் குடித்து விட்டு ப்ரமிளாவை இன்னும் கொஞ்ச நேரம் தூங்கச் சொல்லி விட்டுக் கிராமத்தை நோக்கிப் புறப்பட்டான்.

ஷண்பேகர் குளித்திருந்தான்.

வாசுதேவன் அவர்களை முதலில் டெபுட்டி கமிஷனரின் அலுவலகத்துக்கு அழைத்துச் சென்றான். டிஸி என்று அழைக்கப்பட்ட அந்தப் பேர்வழி ட்ரான்ஸ் ஃபருக்காகக் காத்திருந்து நொந்து போயிருந்தவர் போலத் தோன்றினார். ''இங்கே போய் எதுக்கு? வேற இடமே அகப்படலையா உங்களுக்கு?'' என்றார்.

''வள்ளிக்குப்பம்தான் சரியான இடம்னு வெள்ளைக்காரன் சொல்லியிருக் கான் ஸார்.''

''வெள்ளைக்காரனுக்கு வள்ளிக் குப்பம் எப்படித் தெரிந்தது?'' என்று தன் அருகாமை கிளார்க்கை பார்த்துக் கொள்ள, அவர் மிகையாகச் சிரித்தார்.

ஷண்பேகர் 'ஸைட் செலக்ஷன்' முறையை விவரமாக அவருக்கு வருணித் தான். அதில் ஒரு அட்சரம் புரிந்திருக்காது. 'மேன்மேடு நாய்ஸ்' என்றதும் ஒருமுறை சிரித்துக் கொண்டார். அவர்களுக்கு கெர ஸின், டீஸலுக்கு பர்மிட் தந்தார்.

''ஒரு குக் கிடைச்சாத் தேவலை'' என்றான் மனோஜ்.

''ஃபேமலியோட வந்திருக்கார்.''

''அப்படியா!'' என்று முகம் மலர ''எங்க வீட்டுக்கு வந்துருங்களேன் என் ஒய்ஃபுக்கு பொழுதுபோக்கா இருக்கும் என்றார்.''

''பார்க்கலாம். முதல்ல சந்திக்கலாம்.''

ஆரம்பாக்கத்திலிருந்து பஸ்ஸில் செடுப்பாக்கம் சாலையில் சென்றார்கள். எதிரே கான்வாய் கல்வர்ட்டில் காத்திருந்தது கடந்து, பஸ் அவர்களை வள்ளிக்குப்பத்தில் இறக்கியது.

கையில் உள்ளதையெல்லாம் வாங்கிக் கொள்ள ஒரு கும்பலே வந்து பஸ்ஸைச் சூழ்ந்து கொண்டது. ''எல்லாரும் ப்ராஜெக்

சுஜாதா

டில் கூலி வேலைக்கு'' என்றார் வாசு தேவன்.

''இத்தனை ஆளா?''

''மஸ்டர் ரோலில் போட்டிருக் கிறேன்.''

''பெண்கள் வேண்டாம்.''

ஷண்பேகர், ''இருக்கட்டும் அவ்வப் போது ஓய்வு தேவையாக இருக்கும்'' என்றான்.

வாசுதேவன் புரியாமல் சிரித்தார்.

கிராமத்து 'மணியக்காரர்' என்று அழைக்கப்பட்டவர் அவர்களை வரவேற்று கயிற்றுக் கட்டிலில் இளநீர் கொடுக்க வைத் தார். சுகமாகக்காற்று வீசக் கொஞ்சம் மாட்டு மூத்திர நாற்றம் அடித்தாலும் பரவாயில்லை போல இருந்தது. மனோஜ் பெண்டாட் டியை விட்டு வந்தோமே என்று வருத்தப் பட்டான்.

''சாமான்கள்ளாம் வ ந் தி ரு ச் ச ா? கலிக்டருகிட்டருந்து கடுதாசி வந்திருச் சுங்க. பொறம் போக்குதான் இடம். கொஞ்சம் கொஞ்சம் கேவரகு, மழை வந்தா விதைப்போம். இந்த வாட்டி வாணாம் னுட்டேம் எல்லாம் தயாராத்தான் இருக்கு துங்க. கிராமத்தில வேலை வெட்டி கெடைச்சா நல்லது'' என்றார் மணியக்காரர்.

பசு மாடுகளும் எருமை மாடுகளும் கட்டிய மாட்டுக் கொட்டகைக்கு அருகே 'காம்புஸ்' என்று சாக்பீஸால் எழுதியிருந் தது. பால் கொண்டு வந்து கொடுத்தார்கள். லோட்டா உயரமாக இருந்தது.

ஷண்பேகர் ஒரு பெண்ணிடம், ''உன் பெயர் என்ன?'' என்றான்.

முப்பது நாட்களில் தமிழ் என்கிற புத்த கம் வாங்கியிருந்தான்.

அந்தப் பெண் பதில் சொல்லாமல் மரத் துக்குப் பின்னால் மறைந்து கொண்டாள்.

''ஷண் ஈஸி. நாட் தட் ஃபாஸ்ட்'' என்றான்.

ஜீப்பில் பதினைந்து பேர் ஏறிக் கொள்ள, அவர்களில் சிலரை உதிர்க்க வேண்டியிருந்தது. ஒரே சமயம் பத்துப் பேர் வழி சொல்ல சைட்டை அடைந்தார்கள்.

நல்ல மேட்டுப் பகுதி. பீட பூமி போலத் தட்டையாகவும் இருந்தது. நன்றாகத்தான் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள் என்று தோன்றியது.

டீல்வுட் க்ரேட்டுகளில் சாதனங்கள் வந்து இறங்கியிருந்தன. தார்பாலின் போட்டு மூடியிருந்தார்கள்.

சிவில் ஆசாமி கை குலுக்கி ஸைட் கட்டடம் ரெடியாக இருப்பதாகச் சொன் னான். ஷண்பேகர், ''என் கம்ப்யூட்டர் பெட் டிகள் எங்கே?'' என்று கேட்டான்.

மனோஜ் அந்த இடத்தைப் பார்த்தான். கட்டடத்துப் பக்கம் நடந்து சென்றான். போகிற வழியில் ஒரு மாமரம் மட்டும் இருந்தது. ஸைடு லோபுகளைப் பிரதிபலிக் கும் என்று தோன்றியது.

''எங்க மணியக்காரரே உங்க பேரு என்னங்க?''

''பொன்னையாங்க அய்யா.''

''பொன்னையா, இந்த மரத்தை வெட் டிரணும். நாளைக்கு நாலு ஆளும் கோடாலி எல்லாம் கொண்டு வந்துருங்க, என்ன?''

மணியக்காரர் பொன்னையாவின் முகம் சற்று மாறியது.

''மரம் இருந்துட்டுப் போவட்டுங்க. கட்டடம் அந்தாலைல்ல இருக்குது.''

''இல்லைங்க, மரம் இருந்தாக் கொஞ் சம் குழப்பம் ஏற்படும். முதல்ல வெட்டி ருக்கணும். அவங்க சொல்லலை?''

''சொன்னாங்க. சைடு இன்ஜினியரு வரட்டும்னு சொன்னாங்க.''

''வெட்டிருங்க'' என்றான்.

பக்கத்திலிருந்தவர்கள் எதற்காகக் கூடிப் பேசிக் கொள்கிறார்கள் என்று தெரிய வில்லை. மரத்தின் வேரடியில் குங்குமமும்



மஞ்சளும் வைத்திருந்ததை ஷண்பேகர் கவனித்து 'லக்' என்று அதை வணங்கினான்.

கிராமத்து இளைஞர்கள் கும்பலாக என்ன பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்று அறிய முடியவில்லை. எல்லாரும் வாக தேவனைச் சூழ்ந்து கொண்டனர்.

வாகதேவன் அவர்களைத் தனியாக அழைத்து விசாரித்தார்.

மனோஜ் சிமெண்டு கட்டடத்துக்குப் போனான். வெளியே டிஸ்டம்பர் அடிக்கா விட்டாலும் உள்ளே ஃபினிஷ் ஆகியிருந் தது. வேலையைத் துவங்கவும் பின்னால் ஜெனரேட்டர்ரூம் இருந்தது. வேலிக்கு மரக் கம்பங்கள் நடப்பட்டிருந்தன. நல்ல உயர மான ஸ்தலம். சன்னல் வழியாக எட்டிப் பார்த்ததில் பல மைல் தூரம் பூமி பச்சையும் சிவப்புமாக மடங்கியும் உருண்டும் சென்று கொண்டிருந்தது. தொடுவானம். எப்போ தாவது ஒரு பஸ்,இரைச்சலில்லாமல்.

''பர்ஃபெக்ட்'' என்றான். ''நல்ல சைட், மரத்தைத் தவிர.''

''மரம் நாளை வெட்டப்படும்.''

''எனக்குச் சந்தேகமாக இருக்கிறது.''

''ஏன்?''

அந்தக் கிராம மக்கள் கூடிப் பேசு வதைப் பார்த்தால் மரம் வெட்டுவதற்கு அவர்களுக்கு ஏதோ தயக்கம் இருக்க வேண்டும்'' என்று தோன்றுகிறது.

''மரம் இருந்தால் அன்டென்னா பாட் டர்ன் பாதிக்கப்படும். இன்ஸ்டலேஷன் மான்யுவலைப் பார். ரிப்போர்ட்டில் மரத்தை வெட்ட வேண்டும் என்று போட் டிருக்கிறது. பார்க்கலாம்.''

''பார்க்கலாம் என்ன பார்க்கலாம்! இப் போதே இந்த மேட்டரைத் தீர்த்து விடுவது நல்லது. பொன்னையா பொன்னையா இங்கே வாங்க.''

பொன்னையா, ''என்ன எஜமானரே?'' என்றார் பயபக்தியுடன் வந்து.

''இந்த மரத்தை வெட்டறதில ஏதும் தயக்கம் இல்லைதானே.''

''வெட்டித்தான் ஆகணும்னா வெட்டிர லாம். ஆனா...''

''ஆனா என்ன?''

''அதில ஒரு முனீஸ்வரன் இருக்காரு.''

''மரத்துக்குள்ளயா?''

''ஆமா.''

''மரத்தைப் பார்த்தா ஒல்லியா இருக் குது.''

''ஆளு இல்லைங்க.''

''பின்ன?''

''ஆவி.''

மனோஜ் சிரித்தான். ''அதனால்?''

''வெட்டிட்டா முனிஸ்வரன் கோவிச் சுப்பாரு.''

''கோவிச்சா...''



''தலைவரே! நம்ம கட்சியில் கோஷ் டியே இல்லைன்னு ஏன் பொய் அறிக்கை விட்டிருக்கீங்க?''

''நம்ம கட்சியில் கோஷ்டி எங்கே இருக்கு? ஒவ்வொருத்தனும் தனித்தனி யாத்தானே இருக்கான்!''

– ஞா. ஞானமுத்து.

''காவு வாங்கிருவாருங்க.''

''என்னங்க எந்த நூற்றாண்டில இருக் கீங்க. இங்க வெக்கப் போற சமாசாரம் என்ன தெரியுமா? 'ஸட்காம்' சாட்லைட்டுன்னு மேல பறக்க விட்டிருக்காங்க. பூமிக்கு முப்பத்தாறாயிரம் கிலோ மீட்டர் உயரத்தில். அதில் தொடர்பு கொண்டு ஒலகம் பூராப் பேசப் போறோம். பாடப் போவுது. படம் வரப் போவுது. இந்த யுகத்தில் முனீஸ்வரன் கோவிப்பாரா காவுவாங்குவாரா... என்ன சொல்றீங்க நீங்க?''

''அதெல்லாம் சரிதாங்க. ஆனா நடந் திருக்குதே.''

''என்ன?''

''இதுவரை ரண்டு மூணு காவு வாங்கி யாச்சே. ரத்தம் கக்கி ஜனம் செத்துட் டாங்களே.''

மனோஜ், ''இப்ப என்ன சொல்றீங்க?'' என்றான்.

''எங்க கிராமத்தில் யாரும் அந்த மரத்தை வெட்ட மாட்டாங்க.''

''அ வ் வ ள வு தா னே! வாகதேவன் ஒண்ணு செய்யுங்க. ஆரம்பாக்கம் போய் நாளைக்கு நாலு வேற ஆளு கூட்டிக்கிட்டு வாங்க.''

''எஸ் மிஸ்டர் மனோஜ்.''

வெளியூர் ஆளுங்க வந்து வெட்டினா ஒங்களுக்கு ஆட்சேபணை இல்லையே!''

''ஏதோ செய்யுங்க'' என்று ஏமாற் றத்துடன் போனார்.

மனோ, ஷண்பேகருக்கு விவரமாக மொழிபெயர்த்துச் சொன்னான். ''நான் சென்ஸ்'' என்றான் அவன்.

''ஏதாவது சாந்தி பண்ணணுமா, பேய்கிய் ஓட்டணுன்னாச் செய்துரலாம்'' என்றார் வாகதேவன்.

''நாம் சாட்டிலைட்டு வெக்க வந்தமா பேய் ஓட்ட வந்தமா?'' என்றான் மனோஜ்.

ஆரம்பாக்கத்துக்குத் திரும்பி வந்த போது அறையில் ப்ரமிளா இல்லை.

(தொடரும்)

இன்னும் சில மணி நேரங்களில் சென்னையை அடைந்து விடலாம் என்ற எண்ணத்தில் சென்று கொண்டிருந்த என் காரின் ஹெட்லைட்டில் பெரிய கல் ஒன்று வந்து விழுந்து, கண்ணாடியைப் பொடிப் பொடியாக்கியது. சாலையில் சவுக்குக் கட்டைகளுடனும், சைக்கிள் செயின்களுடனும் ஒரு கூட்டம்.

''யோவ் காரை நிறுத்து!''

''ஏன், என்னாச்சு?'' என்றவாறே காரை நிறுத்தினேன்.



சூழ்நிலையின் தீவிரத்தை உணர்ந்த என் மனைவி வர்ஷா சட்டென்று புடவையைத் தலைப்பால் தோள்வரை போர்த்தி நகைகளை மறைக்க முயன்றாள். பயணத்தின் அலுப்பினாலும் பின் இரவின் அழுத்தத்தாலும் என் அப்பாவும், என் மகள் ஸ்ரேஷ்டாவும் உறங்கிக் கொண்டிருந்தனர்.

''என் தலைவர் போயிட்டார் தெரியுமா? கார் சவாரி கேட்குதா உனக்கு? காரை ஓரமா நிறுத்து. தலைவரின் சவ ஊர்வலம் முடிஞ்சபின்னேதான் வண்டியை எடுக்கலாம். புரியுதா?''

''யார் செத்துப்போயிட்டாங்க?''

''ராஜீவ் காந்தி! தெரியுமா ராஜீவ் காந்தி. ஸ்ரீபெரும்புதூரில் கொன்னுட்டாங்க. சொல்.... 'ராஜீவ் காந்தி வாழ்க!' பலமாச் சொல்.''

யார். எப்படி? என் மனம் எண்ணும் போதே அவன் சொன்னான்.

''ஸ்ரீதேவி, கௌதமி, சில்க் பேர் எத்தனை தடவை சொல்லியிருப்பே! உரக்கச் சொல் ராஜீவ் வாழ்க!''

சொன்னேன்.

ஆனால் இறந்தவரை 'வாழ்க' என்று எப்படிச் சொல்ல முடியும்? அவர் புகழ் வாழ்க என்றல்லவா சொல்ல வேண்டும். அதிருக்கட்டும்.

''யார், எங்கே கொன்னாங்க?''

''இங்கே வாய்யா! வக்கணையா, விவரமாச் சொல்றேன்!''

''டேய் சார் டாக்டர்டா! காரில் ஸ்டிக்கர் ஒட்டியிருக்கு பார்.''

''நாளைக்குக் காலையிலே பேப்பர் வரும் படிச்சுக்க சார்! டேய் சிதம்பரம், ஐயா காரை நம்ம வீட்டுக்கிட்டே நிறுத்தச் சொல் பெரிய ரூமை ஒழிச்சுக் கொடு. காலையிலே பேசிக்கலாம்.''

சிதம்பரம் என்னை நோக்கி வந்தான்.

ராஜீவ் காந்தியையா கொன்றுவிட்டனர்? அமைதிக்கு உறைவிடமான தமிழகத்திலா இக்கொடிய சம்பவம்? நம்ப முடியவில்லையே! சரி. அவர் இறந்ததில் - கொலையுண்டதில் எனக்கும் ஆழ்ந்த வருத்தம்தான். மனவேதனைதான். அதற்காக என்னை வழிமறித்து, என் இயக்கத்தை முடக்குவதில் இவர்களுக்கு என்ன லாபம்? ஒரு தலைவரோ பிரதமரோ, முதல் அமைச்சரோ இறந்தால் பொது வாழ்க்கையைச் சீர்குலைத்துத்தானா எந்த ஒரு கட்சியும் தன் அனுதாபத்தைத் தெரிவிக்க வேண்டும்? நாளைக்கு இரண்டு முக்கியமான ஆபரேஷன்கள் செய்தாக வேண்டுமே!

இதற்குள் ஸ்ரேஷ்டாவும், அப்பாவும் எழுந்திருந்தனர்.

''காரை எடுக்கறீங்களா?''

பொது வாழ்வை முடக்குவதோ பொது மக்களுக்கு இடையூறு செய்வதோ கூடாது என்று இவர்களின் கட்சித்தலைவர் இவர்களுக்குக் கற்றுத் தராதது மட்டுமல்ல

ஷண்முகப்ரியா

கேவலம்; இச்சந்தர்ப்பத்தில் சிந்தனையற்றிருக்கும் ஒரு வெறிக் கூட்டத்தின் அறிவற்ற செய்கைக்கு, நாம் அனைவருமே மௌனமாய் ஒப்புதல் தருகிறோமே, அதுவும்தான்!

காரை ஸ்டார்ட் பண்ணி அவன் சொன்ன திசையில் ஓட்டினேன்.

வயலைத்தாண்டி தோப்பினூடே ஒரு வீடு. மொட்டை மாடி. வாசல் திண்ணையைத்தாண்டி சிதம்பரம் மின்விளக்கை எரிய விட்டான். ஒரு கட்டில். மூன்று பாய்கள். மேசை மேல் இருந்த கடிகாரம் ஒரு மணி என்றது. ஒரு பானையிலிருந்து எவர்சில்வர் ஜக்கில் சிதம்பரம் தண்ணீர் எடுத்து வைத்தான்.

''இருட்டிலே வெளியே போகவோ, காரை எடுக்கவோ முயற்சி பண்ணாதீங்க. எங்க தலைவர் இங்கே பெரிய்ய ஆளு!''

இருபது வயது கூட இருக்காது சிதம்பரத்துக்கு. அவன் என்னை எச்சரித்து விட்டுப் போனான்!

அப்பாவையும் சிரேஷ்டாவையும் கட்டிலில் படுக்க வைத்தேன். அப்பாவின் எண்ணற்ற கேள்விகளுக்குப் பொறுமையாகப் பதில் கூறினேன். கூற வேண்டும். சின்ன ''இர்ரிடேஷன்'' அப்பாவின் பிளட் பிரஷரை எங்கோ கொண்டு போய் விடும். எண்பது வயதுக் குழந்தை அவர். சிரேஷ்டா மறுபடியும் உறங்கிவிட்டாள்.

''என்னங்க?'' என்றாள் வர்ஷா பார்வை யால்.

''படுத்துக் கொள். வேறு வழியில்லை'' என்றேன்.

ஷர்ட்டில் இருந்த பணத்தைப் பனியனுக்குள் பத்திரப்படுத்தினேன். பாயை விரித்துப் படுத்தேன். தூக்கம் வரவில்லை.

ட்யூப்லைட்?

எரியட்டும். புதிய சூழல். புதிய இடம். வெளிச்சம் பயத்தை விரட்டும் துணையும் கூட. எப்போது உறங்கினேன் என்றே தெரியவில்லை.

**கா**லையில் எழுந்த போது வெயில் பளீரென்று வந்திருந்தது. ரேடியோவும் தன் பங்குக்குச் சோகமிசைத்துக் கொண்டிருந்தது.

குளிக்கும் இடத்தைச் சிதம்பரம் காட்டி விட்டுப் போனான்.

காப்பி வந்தது. காப்பியா அது?

''இதைச்சதைக் குடிச்சுக்குங்க சார். இங்கே மாடு சினையா இருக்கு. அதனாலே நாங்களே வெளியிலேதான் பால் வாங்கறோம். சாயங்காலம் அந்தப் பால் கூடக் கிடைக்காது!'' என்று சொல்லிக் கொண்டே அவன் வந்தான்.

இரவில் சரியாக நினைவில் வைத்துக் கொள்ள முடியாத அவன் முகம் இப்போது பளிச்சென்று இருந்தது. ஒரு தீவிரமான எண்ணமுடைய முகம் அது. இளமையின் வாயிற் படிக் கோலமாக இருந்தது. உள்ளடங்கிய கண்கள், சிறு மீசை.

''என் பெயர் கருப்பன். நேத்து நானும் என் நண்பர்களும்தான் உங்க காரை நிறுத்தினோம். பேப்பர் பாருங்க. மெட்ராஸே நிலைகுலைஞ்சு போய்க் கிடக்குதுன்னு போட்டிருக்கான். உங்களை நாங்க நிறுத்தினது தப்பில்லைன்னு இப்போ உங்களுக்குப் புரிஞ்சிருக்கும். உங்களைச் சாப்பாடு போடாமல் பட்டினியாக வைப்பது எங்கள் எண்ணமல்ல. எங்கள் தலைவர் எங்களுக்கு அப்படிப்பட்ட பாடம் கற்றுத்தரலை.''

யார் இவனுடைய தலைவன்(ர்)? இப்படி பிடிகொடுத்துப் பேசாததே அவர்கள் வழக்கம்!

பேப்பரைப் பார்த்தேன். ராஜீவின் கொலை பற்றிய விவரங்கள், புகைப்படங்கள் நெஞ்சைத் தொட்ட தலையங்கங்கள் வெளிவந்திருந்தன. புகைப்படத்தைப் பார்த்ததும் மனம் வேதனைப்பட்டது. இறைவா, நாம் எந்த நாட்டில் இருக்கிறோம்? மகான் ராமானுஜர் அவதரித்த ஊரிலா இந்த அவச் செயல்?

''**சா**ர் சாப்பாடு ரெடி!''

சாப்பாடே இறங்கவில்லை. அப்பா ரொம்ப அசௌகரியமாக இருப்பதை உணர்ந்தேன். சிரேஷ்டா தோட்டத்தில் விளையாடிக் கொண்டிருந்தாள். கருப்பன் வீட்டு மாடியிலிருந்து பார்த்தால் தெருவெங்கும் வரிசையாகக் கார்களும், லாரிகளும் நிறுத்தப்பட்டிருந்தது தெரிந்தது. இத்தனை பேருக்கும் இவன் சாப்பாடு போட முடியுமா? இல்லை சாப்பாடு போட்டாவது வண்டிகளை நிறுத்தித்தான் 'துக்கம்' கொண்டாட இவனுக்கு ஏதாவது பிரார்த்தனையா? பைத்தியமா?

''சிரேஷ்டா, அந்த அங்கிளைக் கூப்பிடு.''

கருப்பன் வந்தான்.

'' என் சார் வேணும்?''

''இத்தனை வண்டியை நிறுத்தியிருக்கிறாயே; அவங்க சாப்பாட்டுக்கு என்ன செய்வாங்க. கடைகளும் கிடையாதே!''

''அவங்க சாப்பாடு என் பிரச்னை இல்லீங்க!''

சில மணி நேரம் முன் தலைவனின் பாடமென்றான். இப்போது இவன் பிரச்னை இல்லையாமே!

''இது அக்கிரமம்! ஆனால் எனக்கு மட்டும் தங்க இடம் கொடுத்துச் சாப்பாடு போடறியே, இது என்ன நியாயம்?''

''சுயநலம்தாங்க! என் மனைவிக்குப் பிரசவ டைம். உங்க காரை நிறுத்தின பிறகு தான் நீங்க டாக்டர்னு தெரிஞ்சது! கடவுளாப் பார்த்து அனுப்பிச்சார்னு நினைச்சுக் கிட்டேன். உங்களை மடக்கிப் போட்டு ரோடிலேயே நிறுத்தறதைவிட, உயிரைக் காப்பாத்தற புனிதமான தொழில்லே ஈடுபட்ட உங்களுக்கு உபகாரம் பண்ணினா, நன்றிக்கடனா எனக்கு உதவுவீங்க என்ற சுய நலம்தாங்க. எல்லா இடத்துக்குமே வண்டியோ, ஆளோ போக முடியாத நிலை யிலே ஒரு டாக்டரையே வீட்டிலே பாது காப்பாக வைச்சிருக்கிறது என்னுடைய சுய நலம் மட்டுமில்லை; நீங்க மெட்ராஸ் வரை போறதுக்கு நான் தரும் பாதுகாப்புன்னு கூடவைச்சுக்கலாம் இல்லையா?''

இப்படி அவன் சொல்லிக் கொண்டி ருக்கும் போதே, ''கருப்பா, மங்காவுக்கு இடுப்புவலி எடுத்திடுச்சு. டாக்டரைக் கூட்டியா!'' என்று கருப்பனின் சகோதரி அழைத்தாள்.

''போங்க சார்! உங்க கடமையைச் செய்யுங்க!''

உத்திரவு, கட்டளை, கடமையின் அழைப்பு - எப்படி வைத்துக் கொள்வது? என்னை வழிமறித்து நிறுத்தியதற்குப் பழிவாங்கப் பிரசவம் பார்க்க மாட்டேன் என்று கூறிவிடலாமா? நான் டாக்டருக்குப் படித்துவிட்டு எடுத்துக் கொண்ட சத்தியப் பிரமாணம் என்ன ஆவது? இவன் வீட்டு உப்பைத் தின்றதற்குத் துரோகம் நினைக்க லாமா?

''வர்ஷா, வா....''

மங்காவைப் பரிசோதித்தேன். தலை செட் ஆகியிருந்தது. பிரசவ வலியை அவள் உணர்ந்து கத்தினாள். பிரசவம் சுகமாக ஆவதற்கும் வலியின் தொடர்ச்சியினால் அவள் வேதனையை உணராதிருக்கவும் இன்ஜெக்ஷன் போட்டேன். ஓர் உயிரி லிருந்து இன்னோர் உயிர் பிரிவது எத்தனை இன்பமான வேதனை!

பெண் குழந்தை பிறந்தது.

சொன்னதும், ''இந்தாங்க சார், ஸ்வீட் சாப்பிடுங்க,'' என்றான் கருப்பன்.

''ஸ்வீட் ஏது?''

''நம்ம பிஸ்கட் கடையின் பின்கதவைத் திறந்து இந்த சாக்லேட் எடுத்தேங்க.''

''உனக்குக் குழந்தை பிறந்த சந்தோ ஷத்தை விட, ராஜீவ் காந்தியின் மரணம் - அதன் துக்கம் அதிகமாயிருக்கு. எனக்கு ஸ்வீட் வேண்டாம். கடையில் உள்ள பிஸ்கெட் ரொட்டி எல்லாத்தையும் வழி யிலே நிக்கிறாங்களே அவங்களுக்குக் குடு.''

அவன் என்னை வினோதமாகப் பார்த்தான்.

கருப்பன் வீட்டு டிரான்ஸிஸ்டரில் செய்திகள். பிறகு பல்வேறு பெருந் தலைவர்களின் இரங்கற்செய்திகள். சென் னையிலும் பல்வேறு நகரங்களிலும் விரித் தாடும் வன்முறையாட்டங்கள்.

இது வன்முறைக் கலாசாரத்துக்குப் பலி யானதற்கு ஒரு சான்று. அரசியல் கட்சிகள், குண்டர்கள் கூட்டம் சட்டத்தைத் தம் கையில் எடுத்துக் கொண்டது மட்டுமல்ல; தனிப்பட்ட விருப்பு வெறுப்புக்கு, ஒரு பிரபலத்தின் மரணம், பழிவாங்கும் களமாகிவிடுகிறது - காரணமாகிவிடுகிறது. கத்தியின்றி ரத்தமின்றி வந்த யுத்தத்தால் சாதித்த - கண்ணீரால் காத்த சுதந்திரப்பயிர் வளரவேயில்லை! கற்றி வேலியிட்ட விஷச் செடிகளே வேரூன்றி விட்டன.

அழுத்தமாய் இரவு வந்தது. ஏதோ உண்டோம், உறங்கினோம்.

''என்னங்க, சீக்கிரம் எழுந்தி

ருங்க....'' வர்ஷா என்னை உலுக்கினாள்.

''அப்பாவுக்கு ரொம்ப உடம்பு முடியலை, பாருங்க.''

''ஓ! காட்!''

இதயத்துடிப்பு அப்நார்மல். பிளட் பிரஷர் ரொம்ப அதிகம். என் மருந்துப் பெட்டியிலிருந்து எடுத்த மருந்தை ஊசி மூலம் ஏற்றினேன்.

நேரம் மௌனமாகக் கரைந்து விடிந்தது.

ஆனால் அப்பாவுக்கு வந்த ஸ்ட்ரோக்கை என்னால் தடுக்க முடியவில்லை. அதன் தீவிரத்தைக் கட்டுப்படுத்த வேறு ஒரு மருந்தை இன்ஜெக்ட் பண்ணினேன். வலது பக்க முகம், கைகள் இழுத்துக் கோணி... இவரை எப்படியாவது ஒரு நர்ஸிங் ஹோமில் சேர்த்துடணும்.

கருப்பன் மேல் எனக்கு ஆத்திரம் வெறியே வந்தது.

நிலைமையைச் சரியாக உணராத அவன், ''சார், ராஜீவைக் கொன்றது யாராக இருக்கும்?'' என்றான்.

''நீ!'' என்றேன் அமைதியாக.

''ஜோக் அடிக்கறீங்களா சார்!''

''இல்லை. உண்மையாகச் சொல்கிறேன். நீயேதான்!''

''முட்டாள் தனமாகப் பேசாதீங்க சார்! ஸ்ரீபெரும்புதூர் எங்கே இருக்கு? நான் எங்கே இருக்கேன்! ரேடியோ நியூஸ் கேட்டுத்தான் எனக்கு விவரம் தெரியும். நீங்க என்னடான்னா....''

''நீதான் கருப்பா!''

அவன் கண்கள் சிவந்தன.

''நீயென்றால் கருப்பன்னா அர்த்தம்? உனக்குள் உள்ள வெறி உணர்வு போல் வேறு யாருக்கோ இருந்திருக்கு. அவனோ, அவளோ கொன்றிருக்காங்க. புரியுதா? காந்திஜியைக் கொன்றது கூட அப்படித் தான். காந்திஜி இறந்தார் என்ற செய்தி கேட்டதும் ரேடியோவுக்கு முன்னால் குலுங்கிக் குலுங்கி அழுதவங்க எத்தனையோ பேர். சுதந்திரப் போராட்டத்திலே காந்திஜியுடன் இணைந்தவர்களும் சரி, மாறுபட்ட அபிப்பிராயம் உள்ளவர்களும் சரி, வன்முறையில் ஈடுபடவே இல்லை. பொது வாழ்க்கை ஸ்தம்பிக்கவேயில்லை.''

''என்ன சார் உபதேசம் பண்ணிக்கிட்டு இருக்கீங்க?''

''உபதேசம் இல்லை கருப்பா. உண்மை! உன்னைப் போல் எனக்கும் பழி வாங்கும் எண்ணம் இருந்திருந்தால் உன் மனைவி மங்கா பிணமாகி இருப்பாள். அது எனக்கும் என் தொழிலுக்கும் மரியாதை தராது என்பது எனக்குத் தெரியும். நீ சொன்னாயே நன்றிக் கடன்... அதை நான் செலுத்திட்டேன். என் அப்பாவுக்கு நான் செலுத்த வேண்டிய நன்றி இருக்கு. புறப்படட்டுமா? வர்ஷா கிளம்பு.''

அவனுக்கு உறைத்திருக்கிறது என்பதை அவன் முகம் காட்டியது.

''சாரி சார்! கட்சிக் கட்டுக்கோப்பு அது இதுன்னு... மீறமுடியலை. இனிமேல் இப்படி நடக்காதுங்க. குழந்தைக்கு நீங்களே நல்லதா ஒரு பேர் வைச்சிருங்க.''

இவன் கட்சியில் நடக்கும் வழிமுறைகள் இவன் ரத்தத்தில் ஊறியுள்ளது. யார் குழந்தைக்கு யார் பெயர் வைப்பது? பெற்றவள் அவள். காரணகர்த்தா அவன். இடையில் நான் யார்?

''சொல்லுங்க சார்!''

எனக்குத் தகுதி இல்லையென்றாலும், அவன் ஆசையைக் கெடுப்பானேன்!

''கமலம் என்று வை. அது வடமொழிச் சொல். தூய தமிழில்தான் பெயர் தேவை என்றால் தாமரை என்று பெயர் வை.''

ராஜீவ் என்றால் தாமரைதானே!

''சரி சார்.''

சாலையில் கார்களும் லாரிகளும் ஓடிக் கொண்டிருந்தன. வெற்றிலை பாக்குடன் நூறு ரூபாய் நோட்டைக் கருப்பன் என்னிடம் நீட்டினான்.

''சாரி, கருப்பன்! இங்கே நான் செய்தது என் கடமை. இதற்குப் பணம் வாங்கக் கூடாது. நீ எனக்குச் சாப்பாடு போட்டுப் பாதுகாப்பும் கொடுத்திருக்கிறாய். அது கோடிக்குச்சமம்.''

அப்பாவை பின்சீட்டில் படுக்க வைத்தேன். நான், வர்ஷா, சிரேஷ்டா முன்சீட்டில் அமர்ந்தோம். வண்டியை ஸ்டார்ட் செய்தேன்.

கருப்பனும் அவன் சகோதரியும் மெயின் ரோடுவரை காருடனேயே ஓடி வந்தனர். கண்கள் கசிந்திருந்தன.

என்னால் எண்பது கோடிப் பேரில் குறைந்த சதவிகிதத்தினரைத் திருத்த முடியாமல் இருக்கலாம். ஆனால் இது ஒரு பிள்ளையார் சுழிமட்டுமே!

---

''அந்த டிராபிக் கான்ஸ்டபிளுக்கு ரொம்ப பணக் கஷ்டம் போலிருக்கு...''

''எப்படிச் சொல்றே?''

''ஓவர் ஸ்பீடுல வந்ததாச் சொல்லி, ரோடு ரோலர் டிரைவரைப் பிடிச்சு வச்சுக்கிட்டு 'மாமூல்' கேட்கிறாரு....''

— வி. கி. குமார்.



அமரர் **கல்கி**



# சிவகாமியின் சபதம்

## மூன்றாம் பாகம்

## பிக்ஷுவின் காதல்

## முதல் அத்தியாயம்

# அழியா மதில்

வாதாபி சக்கரவர்த்தி புலிகேசியின் படைகள், மகேந்திர பல்லவரின் காலத்தில் காஞ்சிக் கோட்டையை முற்றுகையிட்டது, தென்னாட்டின் சரித்திரத்தில் பிரசித்தி பெற்ற சம்பவம்.

ஏறக்குறைய எட்டு மாத காலம் அந்த முற்றுகை நீடித்திருந்தது. எனினும், காஞ்சிக் கோட்டையின் மதில்கள் கன்னியழியாமல் கம்பீரமாகத் தலைதூக்கி நின்றன. வாதாபிப் படையைச் சேர்ந்த வீரன் ஒருவன் கூடக் காஞ்சிக் கோட்டைக்குள்ளே கால் வைக்கவும் முடியவில்லை.

வாதாபி வீரர்கள் காஞ்சிக் கோட்டையைச் சூழ்ந்து கொண்டவுடனே, வைஜயந்தி பட்டணத்தில் செய்தது போலவே ஒரே மூர்க்கமாய்க் கோட்டையைத் தாக்கிக் கைப்பற்ற யத்தனித்தார்கள். காலாட் படையைச் சேர்ந்த கணக்கற்ற வீரர்கள் ஏக காலத்தில் கோட்டையின் நாற்புறத்திலும் அகழிகளை நீந்திக் கடக்க முயன்றார்கள். கோட்டை மதில்களின் மேல் மறைவான இடங்களிலிருந்து மழை போல் பொழிந்த அம்புகளும் அகழியிலிருந்த முதலைகளும் அவ் வீரர்களையெல்லாம் எமலோகத்துக்கு அனுப்பின. தப்பித் தவறிக் கரையேறிய வீரர்கள் கோட்டை மதிலோரமாகக் கண்ணுக்குத் தெரியாமல் அமைந்திருந்த பொறிகளில் அகப்பட்டுத் திண்டாடினார்கள். ஆங்காங்கு அகழிகளில் இறங்கிய யானைகளுக்கும் அகழியிலிருந்த முதலைகளுக்கும் பயங்கரமான போராட்டம் நடந்ததில், அகழியில் நிறைந்திருந்த தண்ணீரெல்லாம் செந்நீராக மாறியது.

முதல் முயற்சியில் தோற்ற பிறகு, கோட்டை வாசல்களுக்கு எதிரே அகழியைத் தூர்த்துக் கோட்டைக் கதவுகள் மேல் யானைகளை மோதச் செய்ய முயன்றார்கள். காஞ்சியைச் சுற்றியிருந்த பெரிய பெரிய விருக்ஷங்களையெல்லாம் மத்த கஜங்கள் வேரோடு பெயர்த்துக் கொண்டு வந்து அகழியில் போட்டுத் தூர்த்தன. ஆனால், இந்த வேலை அவ்வளவு எளிதாக நடக்கவில்லை. கோட்டை வாசலின் மேல் மாடங்களில் மறைவான இடங்களிலிருந்து பல்லவ வீரர்கள் வேகமாய் எறிந்த வேல்கள் யானைகளின் கண்களிலும் மற்றுமுள்ள மர்மஸ்தானங்களிலும் தாக்க, அவை வீறிட்டுக் கொண்டு திரும்பியோடிச் சளுக்கர் படைகளுக்குச் சேதமுண்டாக்கின.

பெரும் பிரயத்தனத்தின் பேரில் கோட்டை வாசல்களுக்கு எதிரே அகழிகள் தூர்க்கப்பட்டன. யானைகள் கோட்டைக் கதவுகளை முட்டிய போது, வெளிக் கதவுகள் தகர்ந்தன. ஆனால், வெளிக் கதவுகளுக்கு உள்ளே எதிர்பாராத அதிசயம் யானைகளுக்குக் காத்திருந்தது. புதிதாய் அமைக்கப்பட்டிருந்த உட்கதவுகளில் நூற்றுக்கணக்கான வேல் முனைகள் பொருத்தப்பட்டிருந்தன. இந்த வேல் முனைகளில் வேகமாய் மோதிக் கொண்ட வாதாபி யானைகள்; பயங்கரமாகப் பிளிறிக் கொண்டு திரும்பி, தங்களுக்குப் பின்னாலிருந்த காலாட் படை வீரர்களையெல்லாம் துவம்சம் செய்து கொண்டு ஓடின. பெரிய பெரிய மரக்கட்டைகளைக் கொண்டு வந்து அந்த வேல் முனை பொருந்திய கதவுகளையும் தகர்த்தார்கள். அப்படித் தகர்த்து விட்டுப் பார்த்தால், அக் கதவுகளுக்குப் பின்னால் கோட்டை வாசலை அடியோடு அடைத்துக் கொண்டு கருங்கல்லாலும், சுண்ணாம்பாலும் கட்டப்பட்ட கெட்டிச் சுவர் காணப்பட்டது.

இவ்விதமாக, ஏறக்குறைய ஒரு மாத காலம் கோட்டையைத் தாக்கிக் கைப்பற்றுவதற்கு முயன்று தோல்வியடைந்த பிறகு, நீடித்து முற்றுகையை நடத்திக் கோட்டையிலுள்ளவர்களைப் பட்டினி போட்டுப் பணியச் செய்வதென்று புலிகேசி தீர்மானித்தான். வாதாபிப் படைகள் காஞ்சியைச் சுற்றிலும் நெடுந்தூரம் வரை கூடாரம் அடித்துக் கொண்டு தண்டு இறங்கின.

முற்றுகையை ஆரம்பித்து ஆறு மாத காலம் ஆன போது, கோட்டைக்குள் இருப்பவர்களுக்கு என்ன ஆபத்து நேரிடுமென்று புலிகேசி எதிர்பார்த்தானோ அந்த ஆபத்து வாதாபிப் படைகளுக்கே நேரலாயிற்று. அதாவது உணவுப் பஞ்சம் நேர்ந்தது. இலட்சக்கணக்கான வீரர்களும், ஆயிரக்கணக்கான போர் யானைகளும், வண்டி இழுக்கும் மாடுகளும் ஒரே இடத்தில் இருந்து கொண்டு எவ்வளவு காலத்துக்கு உணவு பெற முடியும்? வடபெண்ணைக் கரையிலிருந்து காஞ்சி வரையில் உள்ள வழியில் புலிகேசியின் படைகளுக்கு யாதொரு உணவுப் பொருளும் கிடைக்கவில்லை. ஏனெனில், வடபெண்ணையிலிருந்து மெல்ல மெல்லப் பின்வாங்கி வந்த பல்லவ சைனியம்,

வாதாபிப் படைக்கு உ ண வு ப் பொருள் ஒன்றும் கிடைக்காதபடி ந ன் றா ய் த் துடைத்து விட்டிருந்தது.

அவ்வாறே, காஞ்சியைச் சுற்றிலும் நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் உள்ள கிராமங்களையெல்லாம் சூனியமாக விட்டு விட்டு ஜனங்கள் போய் விட்டபடியால், வாதாபிப் படைக்கு உணவுப் பொருள் எதுவும் கிடைக்கவில்லை.

இரண்டு மூன்று மாத காலத்திற்குள் காஞ்சியைச் சுற்றியிருந்த காடுகள், தோட்டங்கள் எல்லாவற்றையும் வாதாபியின் யானைகள் அழித்துத் தின்று விட்டன. அப்புறம் அவற்றுக்கு ஆகாரம் தேடுவதற்காகப் பல காத தூரம் போக வேண்டியிருந்தது. அப்படிப் போனாலும் அந்த வருஷத்துக் கடுங் கோடையில் பசுமையைக் கண்ணால் பார்ப்பதே அபூர்வமாயிருந்தது.

இதையெல்லாம் காட்டிலும் மிகப் பயங்கரமான இன்னோர் அபாயம், கோடை முற்றிய போது வாதாபிப் படைகளுக்கு ஏற்பட்டது. அ தா வ து, குடிதண்ணீருக்கே பஞ்சம் உண்டாகி விட்டது.

அந்த வருஷத்தில் காஞ்சியைச் சுற்றிலும் ஏழெட்டுக் காத தூரம் பரவிய பிரதேசங்களில் சில அதிசயங்கள் நடந்து வந்தன. கார்த்திகை, மார்கழியில் தண்ணீர் நிறைந்து ததும்பிக் கொண்டிருந்த பெரிய பெரிய ஏரிகளெல்லாம், தை, மாசி, மாதத்தில் எப்படியோ திடீர் திடீரென்று கரை உடைத்துக் கொண்டு சுற்றுப் பிரதேசங்களை வெள்ளத்தில் மூழ்கடித்தன. இது காரணமாக, சித்திரை மாதத்தில் ஏரிகளில் ஒரு சொட்டுத் தண்ணீர் கூட இல்லை.

ஆங்காங்கு இருந்த கிணறுகளும், குளங்களும், ஏரிகள் உடைத்துக் கொண்டு வெள்ளம் வந்த போது தூர்ந்து போய் விட்டன. எங்கேயாவது கொஞ்சம் தண்ணீர் கண்டால் குடிப்பதற்குப் பயனில்லாதபடி அழுகி நாற்றமெடுத்துக் கிடந்தது.

அந்த நாளில் பாலாற்றில் மூன்று இடங்களில் அணைக்கட்டு கட்டித் தண்ணீரைத் தேக்கி வைத்திருப்பார்கள். வேனிற் காலத்தில் சிறிது சிறிதாக விடுவார்கள். இந்த வருஷத்தில் அந்தத் தேக்கங்களை முன்னமே உடைத்து விட்டிருந்தபடியால் கோடைக் காலத்தில் பாலாறும் வறண்டு விட்டது. பாலாறு வறண்ட காரணத்தினால் காஞ்சியையும் கடலையும் ஒன்று சேர்த்த கால்வாயிலும் தண்ணீர் வற்றிப் போய் விட்டது. கோட்டையைச் சுற்றியிருந்த அகழித் தண்ணீரோ, இரத்தமும் நிணமும் சேர்ந்த சேற்றுக் குட்டையாக மாறியிருந்தது.

எனவே, வாதாபியின் இலட்சக்கணக்கான வீரர்களுக்கும் யானைகள், குதிரைகள், மாடுகள் எல்லாவற்றிற்கும் பாலாற்றில் ஊற்றெடுத்தே குடி தண்ணீர் கிடைக்க வேண்டியிருந்தது.

பசி, தாகங்களின் கொடுமையினால் போர் யானைகள் அவ்வப்போது வெறி பிடித்துச் சிதறியோட, அவற்றின் கால்களில் மிதிபட்டு வீரர்கள் பலர் எமலோகம் சென்றார்கள்.

ஆனி மாதத்திலே ஒரு நாள் வராகக் கொடி வானளாவப் பறந்த கூடாரத்திற்குள்ளே புலிகேசியின் யுத்த மந்திராலோசனை சபை கூடிற்று. முன்னே வடபெண்ணை நதிக்கரையில் நாம் பார்த்த அதே படைத் தலைவர்கள் ஏழெட்டுப் பேர், எதிரில் விரித்திருந்த கம்பளத்தில் உட்கார்ந்திருக்க, வாதாபி மன்னன் தந்தச் சிங்காதனத்தில் கம்பீரமாக அமர்ந்திருந்தான்.

முன்னைக் காட்டிலும் புலிகேசியின் முகத்தில் கடூரமும் கோபமும் அதிகமாகக் கொதித்துக் கொண்டிருந்தன. படைத் தலைவர்களைப் பார்த்து, அவன் கூறினான் : "இந்த மகேந்திர வர்மனுக்குத் தகப்பன் பெயர் சிம்மவிஷ்ணு ; மகன் பெயர் நரசிம்மன். ஆனால், மகேந்திரனோ வெறும் நரியாக இருக்கிறான். வளையில் நரி புகுந்து கொள்வது போல், இவன் கோட்டைக்குள்ளே புகுந்து கொண்டிருக்கிறான். நரி வளையிலிருந்து வெளியே வருமென்று எத்தனை நாளைக்குத்தான் காத்துக் கொண்டிருப்பது? உங்களில் யாருக்காவது ஏதாவது யோசனை தோன்றுகிறதா?"

படைத் தலைவர்கள் மௌனமாயிருந்தார்கள். ஒருவராவது வாய் திறந்து பேசத் துணியவில்லை.

"ஏன் எல்லோரும் மௌனம் சாதிக்கிறீர்கள்! வெற்றி மேல் வெற்றி கிடைத்துக் கொண்டிருந்த போது, நான் நீ என்று எல்லோரும் யோசனை சொல்ல முன்வந்தீர்கள். யோசனை தேவையாயிருக்கும் போது வாயை மூடிக் கொண்டிருக்கிறீர்கள். ஆகா! நமது பிக்ஷு மட்டும் இப்போது இங்கிருந்தால்....?" என்று சொல்லிப் புலிகேசி பெருமூச்சு விட்டான். சபையில் ஒருவன், "பிரபு! பிக்ஷுவைப் பற்றி எந்த விதமான தகவலும் வரவில்லையா?" என்று கேட்டான்.

"பிக்ஷுவிடமிருந்து செதி வந்து நெடுங் காலம் ஆகிறது. வடபெண்ணைக் கரையில் வஜ்ரபாஹு என்னும் தளப்பாளத் தலைவனிடம் அனுப்பிய ஓலைக்குப் பிறகு அவரிடமிருந்து ஒரு தகவலும் இல்லை. மதுரைப் பாண்டியனைப் பார்ப்பதற்கு அவர் போயிருந்த சமயத்தில், ஏதேனும்

நேர்ந்து விட்டதோ, என்னவோ? ஆகா! பிக்ஷு மட்டும் இப்போதிருந்தால் உங்களைப் போல விழித்துக் கொண்டு இருப்பாரோ? ஒற்றர் தலைவரே! புத்த பிக்ஷு என்ன ஆகியிருப்பாரென்று கண்டுபிடிக்கும்படியாக எட்டு மாதத்திற்கு முன்னாலேயே சொன்னேனே? இதுவரை ஏதாவது தகவல் கிடைத்ததா?'' என்று கேட்க, ஒற்றர் படைத் தலைவன் தலை குனிந்து கொண்டான்.

பிறகு புலிகேசி அங்கே எல்லோருக்கும் முதலில் இருந்தவனைப் பார்த்து, ''சேனாதிபதி, உமக்கு என்ன தோன்றுகிறது? முற்றுகையைத் தொடர்ந்து நடத்த வேண்டியதுதானே? மகேந்திர பல்லவனைப் பணியச் செய்ய இன்னும் எத்தனை காலம் பிடிக்குமென்று நினைக்கிறீர்?'' என்று கேட்டான்.

அதற்கு வாதாபி சேனாதிபதி, ''மதில் மேல் காணப்படும் பல்லவ வீரர்கள் கொஞ்சங் கூட வாட்டமின்றிக் கொழுத்தே காணப்படுகிறார்கள். ஆனால், நம்முடைய வீரர்களுக்கு இப்போது அரை வயிறு உணவுதான் கொடுக்கிறோம். இன்னும் ஒரு மாதம் போனால் அதுவும் கொடுக்க முடியாது. சுற்றுப் புறத்தில் பத்துக் காத தூரத்திற்கு ஒரு தானிய விதை கூடக் கிடையாது'' என்றார்.

புலிகேசியின் முகத்தில் கோபம் கொதித்தது. ''ஆமாம்! ஆமாம்! எப்போது பார்த்தாலும் இந்தப் பஞ்சப் பாட்டுத்தான்! இம் மாதிரி மூக்கால் அழுவதைத் தவிர, வேறு ஏதாவது யோசனை சொல்லுவதற்கு இங்கு யாரும் இல்லையா?'' என்று கோபக் குரலில் புலிகேசி கேட்க, படைத் தலைவர்களில் ஒருவன், ''பிரபு! காவேரிக் கரையில் ஆறு மாத காலமாகப் பாண்டிய ராஜா காத்துக் கொண்டிருக்கிறார். சோழ வள நாட்டில் சென்ற வருஷம் நன்றாக விளைந்த தானியம் ஏராளமாக இருக்கிறது. ஜயந்த வர்ம பாண்டியருக்கு ஓலையனுப்பினால், ஒருவேளை அவர் உணவு அனுப்பக்கூடும்'' என்றான்.

இதைக் கேட்ட புலிகேசி சற்று நேரம் ஆழ்ந்த யோசனையில் இருந்தான். பிறகு திடீரென்று துள்ளிக் குதித்து எழுந்து, எல்லாரையும் ஒரு தடவை சுற்றிப் பார்த்து விட்டு, ''என்ன செய்வதென்று தீர்மானித்து விட்டேன். இனிமேல் நான் இங்கேயே சும்மா



உட்கார்ந்திருந்தால் எனக்குப் பைத்தியமே பிடித்து விடும். சேனாதிபதி! நீர் இங்கேயே நமது சைனியத்தின் பெரும் பகுதியுடன் முற்றுகையை நடத்திக் கொண்டிரும். ஓர் இலட்சம் வீரர்களுடன் நான் தெற்கே புறப்பட்டுச் சென்று பாண்டிய மன்னனை நேரில் பார்த்து விட்டு வருகிறேன். யானைப் படை என்னுடன் வரட்டும். ஆஹா! வாதாபியிலிருந்து புறப்பட்ட போது கொழு கொழு வென்றிருந்த நம் யானைகள் உணவில்லாமல் எப்படி மெலிந்து போய் விட்டன! காவேரிக் கரையில் நம் யானைகளுக்கு நிறைய உணவு கிடைக்குமல்லவா?'' என்றான்.

அப்போது ஒற்றர் படைத் தலைவன், ''பிரபு! தாங்கள் அப்படிச் சிறு படையுடன் போவது உசிதமா? பாண்டியனுடைய நோக்கம் எவ்விதம் இருக்குமோ?'' என்று கூறியதற்குப் புலிகேசி, ''பாண்டியனுடைய நோக்கம் என்னவாக இருந்தாலும் என்ன? அவன் நம்மோடு போர் செய்யத் துணிய மாட்டான். அவன் மோசக் கருத்துள்ளவனாயிருந்தாலும் என்ன செய்து விட முடியும்? காவேரிக் கரையில் ஒளிந்து கொள்வதற்குக் கோட்டை ஒன்றும் இல்லை. எதிரி போர்க்களத்தில் நிற்கும் வரையில் எனக்குப் பயமும் இல்லை'' என்றான்.

## இரண்டாம் அத்தியாயம்
# யானைப் பாலம்

அந்த வருஷத்திலே ஆனி மாதக் கடைசியிலேயே காவேரியிலும் கொள்ளிடத்திலும் வெள்ளம் வந்து விட்டது. வாதாபிச் சக்கரவர்த்தியும் அவருடைய சைனியமும் இரண்டு வாரம் பிரயாணம் செய்து கொள்ளிடக் கரைக்கு வந்து சேர்ந்த போது, அந்த நதியில் இரு கரையையும் தொட்டுக் கொண்டு தண்ணீர்ப் பிரவாகம் போய்க் கொண்டிருந்தது.

கொள்ளிடத்துக்கு அக்கரையில்



சேந்தன் ஜயந்தவர்ம பாண்டியன் தன்னுடைய சைனியத்துடன் தங்கிப் பாசறை அமைத்திருந்தான். அவனோடு கொடும்பாளூர் மாதவக் களப்பாளனும் சேரநாட்டுச் சிற்றரசன் இளஞ்சேரலாதனும் தங்கியிருந்தார்கள்.

பாண்டியன், தன் சகோதரியை மாமல்லர் கல்யாணம் செய்து கொள்ள மறுத்ததன் காரணமாகப் பல்லவர் மீது பெரிதும் கோபம் கொண்டிருந்தான். காஞ்சி முற்றுகை ஆரம்பித்த சில தினங்களுக்கெல்லாம் பாண்டிய சைனியம் காவேரிக்கும் கொள்ளிடத்துக்கும் நடுவிலிருந்த பகுதியை அடைந்து விட்டது. பாண்டியனுக்கு அக் காலத்தில் கப்பம் கட்டிக் கொண்டிருந்த கொடும்பாளூர் மாதவக் களப்பாளனும் சேரன் இளஞ்சேரலாதனும் ஜயந்தவர்மன் விருப்பத்தின்படி தாங்களும் தங்கள் சிறு சைனியங்களுடன் வந்திருந்தார்கள். அக் காலத்தில் கொள்ளிடத்திற்குத் தெற்கேயிருந்த தமிழ் மன்னர்கள் அனைவரும் பல்லவர்களிடம் விரோதம் கொண்டிருந்தார்கள். எனவே, ஜயந்தவர்மனும் மற்ற இரு குறுநில மன்னர்களும் இச்சமயம் வாதாபிச் சக்கரவர்த்தியுடன் சேர்ந்து கொண்டு, பல்லவ வம்சத்தாரிடம் தங்களுக்கிருந்த வர்மத்தைத் தீர்த்துக் கொள்ளச் சித்தமாயிருந்தார்கள். இவர்களுடன், சமீபத்திலேதான் உறையூர்ச் சிம்மாசனம் ஏறியிருந்த பார்த்திப சோழன் மாத்திரம் சேர்ந்து கொள்ளவில்லை. பார்த்திப சோழனும் பல்லவர் ஆதிக்கத்தை வெறுத்தானாயினும் வடநாட்டிலிருந்து படையெடுத்து வந்தவர்களுடன் சேர்ந்து கொள்வதற்கோ, அவர்களுடைய தயவை நாடுவதற்கோ அவனுக்கு மனம் வரவில்லை.

மகேந்திர பல்லவரின் தந்தை சிம்ம விஷ்ணுவின் காலத்திலிருந்து சோழ நாடு பல்லவரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது என்பதை முன்னமே தெரிந்து கொண்டோமல்லவா? மற்றபடி எது எப்படிப் போனாலும், இந்தச் சந்தர்ப்பத்தில் சோழ நாட்டை, தான் கைப்பற்றிப் பாண்டிய இராஜ்யத்துடன் சேர்த்துக் கொள்ளுவதென்று ஜயந்தவர்மன் தீர்மானித்திருந்தான்.

ஆனால், சோழ நாட்டு மக்கள் இதைச் சிறிதும் விரும்பவில்லை. அவர்கள் தலைமுறை தலைமுறையாகச் சைவ சமயப் பற்று உள்ளவர்கள். சமீப காலத்தில் திருநாவுக்கரசருடைய ம கி மை யி னா ல் மகேந்திர பல்லவர் சைவ சமயத்தைத் தழுவியது முதல், சோழ நாட்டு மக்கள் பல்லவ சக்கரவர்த்தியிடம் விசேஷ பக்தி கொண்டிருந்தார்கள். எனவே, ஜயந்தவர்ம பாண்டியன் எதிர்பார்த்தபடி சோழ நாட்டார் அவனை உற்சாகமாக வரவேற்கவில்லை. இதனாலும் பல மாத காலம் கொள்ளிடக் கரையிலேயே காத்துக் கொண்டிருக்க நேர்ந்ததாலும், ஜயந்தவர்மன் எரிச்சல் கொண்டிருந்தான். காஞ்சி நகர் முற்றுகை நெடுங்காலம் நீடித்ததில் வாதாபிச் சக்கரவர்த்தியிடம் அவனுக்கு முன்னமிருந்த மரியாதை குறைந்து போயிருந்தது. எனவே, கொள்ளிடத்துக்கு அக்கரையில் புலிகேசி வந்து விட்டது தெரிந்த பிறகும் அவனைப் போய்ப் பார்க்கப் பாண்டியன் எவ்விதப் பிரயத்தனமும் செய்யவில்லை. கொள்ளிடத்தில் பிரவாகம் அதிகமாயிருந்ததைச் சாக்காக வைத்துக் கொண்டு பரிவாரங்களுடன் அக்கரை வருவதற்குத் தன்னிடம் போதிய படகுகள் இல்லையென்று செய்தியனுப்பினான்.

**பு**லிகேசி அதற்கு மறுமொழியாக, கொள்ளிடத்துக்குப் பாலங் கட்டிக் கடந்து நதியின் தென்கரைக்கு வந்து, தானே பாண்டியனைச் சந்திப்பதாகச் சொல்லி அனுப்பினான். இதைக் கேட்ட போது, பாண்டியனுக்கு முதலில் வேடிக்கையாகத் தோன்றியது. ''கொள்ளிடத்துக்காவது, பாலங் கட்டவாவது! - இதென்ன பைத்தியம்!'' என்று சொல்லிச் சிரித்தான்.

ஆனால், மறுநாள் பாண்டியன் தான் தண்டு இறங்கிய இடத்திலிருந்து கொள்ளிட நதியை நோக்கிய போது ஓர் அதிசயக் காட்சியைக் கண்டான். கொள்ளிடத்துக்கு



உதவியாளர் : உங்ககிட்ட யோசனை கேட்க, நம்ம கட்சிப் பிரமுகர்களெல்லாம் இன்னிக்கு வர்றாங்களாம்!

தலைவர் : எதைப் பற்றி யோசனை கேட்கப் போறாங்களாம்?

உதவியாளர் : இனிமேலும் உங்க யோசனையையே கேட்டுக் கொண்டிருந்தால், கட்சி உருப்படுமா என்பது பற்றித் தான் யோசனை கேட்க வர்றாங்க!

– வெள்ளகால் இரா. சுந்தையா.

## அருள்வாக்கு



ஒரு தேசத்தின் பண்புக்கு அளவுகோல் எது? ஒரு நாடு என்று இருந்தால் அதில் எல்லோரும் பண்பாளர்களாக (cultured) இருக்க முடியாது. திருடன், பொய்யன், மோசக்காரன் எல்லோரும் இருக்கத்தான் செய்வார்கள். இப்படிப்பட்டவர்கள் இருந்தாலும் 'இந்தத் தேசத்தில் பண்பு இருக்கிறது. கெடுதலானவர்கள் இருந்தாலும் கூட இந்த நாடு பிழைத்துப் போகும்' என்று தெரிந்து கொள்வதற்கு என்ன செய்ய வேண்டும்? ஒரு நோயாளிக்குப் பல கோளாறுகள் இருந்தாலும் டாக்டர் இருதயத்தைச் சோதனை செய்து பார்த்து விட்டு, 'இருதயம் நன்றாக இருக்கிறது: ஆகவே பயமில்லை' என்கிறார் அல்லவா? அது போல், ஒரு தேசத்தில் கோளாறுகள் இருந்தாலும், அதன் பண்பாட்டை உரைத்துப் பார்க்க ஓர் இருதய ஸ்தானம் இருக்கிறதா?

இருக்கிறது. ஒரு தேசத்தின் பண்பு உயர்ந்திருக்கிறது: மனோபாவங்கள் உயர்ந்திருக்கின்றன: அங்கங்கே அழுக்குகள் இருந்தாலும் மொத்தத்தில் அது சுத்தமாக இருக்கிறது என்பதை உரைத்துப் பார்ப்பதற்கு அந்தத் தேசத்து மகா கவிகளின் (இலக்கியகர்த்தாக்களின்) வாக்கே ஆதாரமாகும். ஒரு தேசத்தின் பண்புக்கு இதயமாக, அல்லது உரைகல்லாக இருப்பது அந்த நாட்டு மகாகவியின் வாக்குத்தான்.

இலக்கிய கர்த்தர்களில் உயர்ந்தவர்கள், மட்டமானவர்கள் எல்லோரும் இருப்பார்கள். இவர்களில் அசுத்தமே இல்லாதவனின் வார்த்தைதான் அழுக்கின் கனம் இல்லாததால் காலப் பிரவாகத்தில் அமுங்காமல், என்றென்றும் மேலேயே விளங்கிக் கொண்டிருக்கும். அப்படிப் பட்டவனின் வாக்கே நமக்குக் கலாசார விஷயங்களில் பிரமாணமாகும்.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

---

உண்மையாகவே பாலம் போட்டிருந்தது. சாதாரணப் பாலம் அல்ல; நதியில் யானைகளை வரிசையாக நிறுத்தி வைத்து, அவற்றின் முதுகின் மேல் பலகைகளைக் கோத்து அதிசயமான பாலம் அமைத் திருந்தார்கள்! இந்த அபூர்வமான காட்சி யானது பாண்டிய மன்னனுக்கு வாதாபிச் சக்கரவர்த்தியின் மேல் மறுபடியும் மரியாதையை உண்டாக்கிற்று.

அந்த யானைப் பாலத்தின் வழியாகப் புலிகேசி தன்னுடைய முக்கிய பரிவாரங்களுடன் ஆற்றைக் கடந்து வரவே, பாண்டியனும் மற்ற இரு குறுநில மன்னர்களும் அவனுக்குத் தக்க மரியாதை செய்து இராஜோபசாரத்துடன் வரவேற்றார்கள்.

பேரரசர்கள் இருவரும் மூன்று தினங்கள் பரஸ்பரம் அளவளாவி மகிழ்ந்தார்கள். பல்லவர்களுடைய கொட்டத்தை அடக்க வேண்டும் என்பதில் இருவருக்கும் பூரண மன ஒற்றுமை இருந்தது. எனவே, பல்லவ வம்சத்தை அடியோடு அழித்து விட வேண்டும் என்றும், காஞ்சி நகரம் வரையில் பாண்டிய ராஜ்யத்துடன் சேர்த்து விட வேண்டுமென்றும், காஞ்சிக்கு வடக்கேயுள்ள பகுதியைச் சளுக்க சாம்ராஜ்யத்துடன் சேர்த்து விட வேண்டுமென்றும் அவர்கள் ஏகமனதாக முடிவு செய்தார்கள்.

ஜயவந்தர்ம பாண்டியன் தானும் தன் சைனியத்துடன் காஞ்சிக்கு அப்போதே புறப்பட்டு வருவதாகச் சொன்னபோது, காஞ்சியைக் கைப்பற்றும் கௌரவத்தைத் தனக்கே விட்டு விட வேண்டுமென்று புலிகேசி வற்புறுத்தினான். காஞ்சிக் கோட்டை பணிந்ததாகக் கேள்விப்பட்டவுடனே பாண்டியன் அங்கிருந்து கிளம்பிக் காஞ்சிக்கு வரலாமென்றும், இப்போதைக்கு வாதாபிச் சைனியத்துக்கு உணவுப் பொருள் மாத்திரம் கொடுத்து உதவும் படியாகவும் புலிகேசி கூற, பாண்டியனும் அதற்கிணங்கி, தன் சைனியத்துக்காகச் சேகரித்து வைத்திருந்த உணவுப் பொருள் அவ்வளவையும் சளுக்கப் படைக்குக் கொடுத்துதவ ஒப்புக் கொண்டான்.

(தொடரும்)



# லஞ்சம் வாங்காதவன்

"ராம்குமார்... ஒரு முக்கியமான விஷயம்.... நீ மனசு வச்சாக் காரியம் முடிஞ்ச மாதிரிதான்..." சேகர் இப்படிப் பீடிகையுடன் பேச்சை ஆரம்பிக்கவும், "திக்" என்றது ராம்குமாருக்கு. சேகரைப் பற்றி நன்றாகவே தெரியும் அவனுக்கு. ஒருநாள், இரண்டுநாள் பழக்கமா என்ன...?

பிரபல எக்ஸ்போர்ட் நிறுவனம் ஒன்றில், எம்.டிக்குப் பி.ஏ. வாக இருக்கும் ராம்குமார் ரொம்ப நேர்மையானவன். நிறுவனத்தின் கௌரவத்திற்கு இழுக்கு நேரும்படி எப்பொழுதுமே நடந்து கொண்டதில்லை. அதே நிறுவனத்தில் பணிபுரியும் சேகர், வேலையில் கெட்டிக்காரன்தான்; இருந்தாலும், வேறு வழிகளில் வருமானம் வருகிறதா என்பதில் குறியாக இருப்பவன். இது தவறு என்று ராம்குமார் பலமுறை சேகரை எச்சரித்தும் அதைப்பற்றிக் கவலைப்படாதவன். போதாக்குறைக்கு, "எங்குதான் இல்லை இந்த லஞ்சம்".... என்று ஆரம்பித்து, அரசாங்க அலுவலக பியூனில் தொடங்கி, அமைச்சர்கள் வரை இது தஞ்சம் அடைந்திருப்பதைப் புள்ளி விவரங்களுடன் விளக்கி, ராம்குமாரின் வாயை அடைத்து விடுவான்!

இப்படிப்பட்ட சேகர், இத்தனை பீடிகையுடன் தன்னிடம் பேச்சை ஆரம்பித்த போதே, அவன் என்ன கேட்கப் போகிறான் என்பது ஓரளவு புரிந்துவிட்டது ராம்குமாருக்கு.

இரண்டு நாட்களுக்கு முன்பு, சேல்ஸ் அசிஸ்டெண்ட் வேலைக்கு இண்டர்வியூ நடந்தது. இது சம்பந்தமாக யாரையோ சிபாரிசு செய்யப் போகிறான்... அந்த நபரிடம் இதற்காக எவ்வளவு வாங்கித் தொலைத்தானோ என்னவோ....!

"என்ன ராம்குமார் நான் இன்னும் விஷயத்த ஆரம்பிக்கவேயில்லை.... அதற்குள் மலைச்சு நின்னுட்டே.... சுற்றி வளைக்காம நேராகவே விஷயத்துக்கு வரேன். சம்பத்ன்னு ஒரு கேண்டிடேட். இண்டர்வியூ அட்டெண்ட் பண்ணியிருக்கான். அவனைப் பத்தி எம்.டி கிட்டச் சொல்லி எப்படியாவது செலக்ஷன் லிஸ்டில் சேர்த்துடணும்...."

"இப்படிச் சொன்னா எப்படி சேகர்...? அந்த நபர் இண்டர்வியூ எப்படி பண்ணியிருக்கான்...? குவாலிபிகேஷன்ஸ் என்ன...?"

"சுமாராத்தான் பண்ணியிருக்கான்.... தகுதி கொஞ்சம் கொறைச்சல்தான்... முன் அனுபவம் கிடையாது...."

"அப்ப அவனுக்கு எப்படி வேலை கெடைக்கும்...?"

"அதனாலதான் உன்கிட்டச் சொல்றேன்... இதோ பார் குமார்.... இத எப்படியாவது முடிச்சுக் கொடுக்க வேண்டியது உன்னோட பொறுப்பு...."

"இந்த செலக்ஷன் முழுக்க முழுக்க



எம்.டியோட முடிவுலதான் இருக்கு...''

''நீ அந்த எம்.டியோட , பி.ஏ.... ஞாபகப்படுத்தறேன் குமார்.''

''சாரி... சேகர். அவர் மெரிட் அடிப்படையில்தான் தேர்வு செய்வார்... இதுல நான் ஒண்ணும் செய்யறதுக்கு இல்லே....''

''கடைசியாக் கேட்கறேன்... நீ சும்மா ஒண்ணும் செய்ய வேணாம்.... ஐயாயிரம் பணம் தரேன்...... இது கொஞ்சம் வெயிட்டான கை...''

''என்னுடையது ரொம்ப ஒயிட்டான கை...'' விருட்டென்று போய் விட்டான் ராம்குமார்.

அப்போதே ஒரு தீர்மானத்துக்கு வந்தான் சேகர்.

'இவனை இப்படியே விடக்கூடாது.... எப்படியாவது நம் வழிக்குக் கொண்டு வரவேண்டும்... பரஸ்பரம் ஒருத்தொருக் கொருத்தர் உதவிக் கொள்ளும் இதனை, ஏதோ பஞ்சமா பாதகங்களில் ஒன்றாக நினைக்கிறானே மடையன்... இது இன்றைய வாழ்க்கையில், ஒரு தவிர்க்க முடியாத அம்சமாயிற்றே.... ராம்குமார் உனக்கு இதைச் சீக்கிரம் புரிய வைக்கிறேன்....'

சேகர் நினைத்தது வீண் போகவில்லை.

அன்று ராம்குமார், சேகரின் கண்களுக்குச் சற்று வித்தியாசமாகத் தென்பட்டான்.

''என்ன ராம்குமார்... ஏன் ஒரு மாதிரியாயிருக்கே....?'' வலியச் சென்று விசாரித்தான் சேகர்.

''............

''இதோ பார் குமார்.... நான் அந்தச் சம்பவத்தை அப்போதே மறந்து விட்டேன்... அதானல்தான் உன்னிடம் இயல்பாக என்னால் பேச முடிகிறது... ஆனால் நீதான் அதையே நினைத்துக் கொண்டிருக்கிறாய் போலும்.''

சேகர் இப்படிச் சொன்னதும், அதற்கு மேல் ராம்குமாரால் பேசாமல் இருக்க முடியவில்லை.

''ஒன்றுமில்ல சேகர்... எங்க மாமா கிட்டேயிருந்து தந்தி வந்தது. மாமிக்கு உடம்பு அதிகமாயிருக்காம்.... உடனே நான் திருச்சிக்குப் போயாகணும். டிக்கெட் ஏதும் ரிசர்வ் செய்யல... ரயிலிலும் பஸ்ஸிலும் கூட்டமான கூட்டம்! அதனால் எப்படிப் போறதுன்னுதான் தெரியாம யோசிக்கிறேன்....''

''நீ எப்ப கிளம்பப் போறே....?''

''உடனே புறப்பட வேண்டியது தான்....''

''ஒண்ணு செய்...... நானும் உன் கூட ஸ்டேஷன் வரை வரேன். ரிசர்வேஷன்ல எதாவது காலியிருக்கான்னு பார்க்கலாம்....''

ராம்குமாரால் சேகரின் பேச்சைத் தட்ட முடியவில்லை.

எழும்பூர் ஸ்டேஷனில் டிக்கெட்டிற்கு நிற்கும் அந்த நீண்ட க்யூவைப் பார்த்ததும் மலைத்து நின்றுவிட்டான் ராம்குமார்.

''இதோ பார் குமார்... நீ உள்ளே போய் டி.டி.ஆரைப் பார்த்து விசாரித்துக் கொண்டிரு..... நான் டிக்கெட் வாங்கிண்டு வரேன்.....''

''நீ இந்த வரிசையில் நின்னு எப்ப டிக்கெட் வாங்கறது.... நான் எப்ப வண்டியப் பிடிக்கறது... ரயிலுக்கு இன்னும் அரை மணி நேரம்தான் இருக்கு....''

''நீ அதப்பத்திக் கவலைப் படாதே குமார்....''

ராம்குமார் டிக்கெட்டிற்கான பணத்தைச் சேகரிடம் கொடுத்து விட்டு, ஸ்டேஷன் உள்ளே சென்றுவிட்டான்.

**க. ஒப்பிலி அப்பன்**

சேகர் அங்குமிங்கும் அலைந்து யாரையோ பிடித்து, கொஞ்சம் பணத்தைக் கொடுத்து, எப்படியோ டிக்கெட்டை வாங்கி விட்டான்.

''என்ன.... டிக்கெட் வாங்கிவிட்டாயா? ஆச்சரியமாயிருக்கே... நான் இன்னும் ஒரு டி.டி.ஆரையும் பார்க்கலே... இப்ப என்ன செய்யலாம்....?''

''இதோ இரு வரேன்...'' என்று பிளாட்பாரத்தின் அந்த நெரிசலில் மறைந்த சேகர், எங்கு போனான் என்றே தெரியவில்லை. வண்டி புறப்படப் பத்து நிமிடம் இருக்கும் போது திரும்பி வந்தான்.

''என்னோடு வா குமார்... சி..... கோச்.....'' என்று ஏதோ சொல்லிக் கொண்டே வேகமாகச் செல்லும் அவனைப் பின் தொடர்ந்து ராம்குமாரும் செல்ல, ஒரு வழியாக ரிசர்வேஷன் பெட்டியில் இடம் கிடைத்து விட்டது.

சேகருக்கு எப்படி நன்றி சொல்வதென்றே தெரியவில்லை ராம்குமாருக்கு....

''ஆமாம் எப்படி இடம் கிடைத்தது?''

நீ திருச்சிக்குப் போக வேண்டியதன் அவசர நெலைமையப் பத்தி அவரிடம் சொன்னேன்..... அவரும் மனசு இளகி....''

''அப்படியா?''

''பின்னஎப்படி? கதையா கேட்கறே...? இதோ பார் குமார்... நீ கொடுத்த பணத்துல இருபத்தஞ்ச அவர் கிட்ட மடிச்சேன்.... டிக்கெட் வாங்கக் கூட பத்து ரூபாய்க்கு ஒரு ஆளை செட் பண்ணினேன்.''

''எப்படியோ.... வண்டியில இடம் கெடச்சதே அது போதும்.... ரொம்ப தேங்ஸ் உனக்கு.''

''தேங்ஸ் இருக்கட்டும் குமார்.... நான் சொல்றத மட்டும் நீ மறுபடி நன்னா யோசிச்சாப் போதும்... லஞ்சம் வாங்கறது தப்புன்னு நீ சொல்றே இல்லையா...? உன்னோட இந்தப் பாலிசிய எல்லோரும் கடைப்பிடிச்சா... எல்லோரும் ஏன்.... குறைந்த பட்சம் இந்த டி.டி.ஆர் மட்டுமாவது கடைபிடிச்சிருந்தா... நீ இப்படி சீட்டுல ஹாயா உட்கார முடியுமா? இத வாங்க மட்டும் முகம் சுளிக்கும் நீ.... இதக் கொடுத்து எவ்வளவு மகிழ்ச்சியா இருக்கே பார்த்தியா? ஓர் அரை மணிக்கு முன்னால இருந்த டென்ஷன் இப்ப எப்படிப் பறந்து போயிடுத்து பார்த்தியா? அதனால்தான் சொல்றேன், லஞ்சம் கொடுத்து, அதனால நீ பயனடையறப்போ, அதே போல வேறொருத்தன் பயன் பெறுவதை மட்டும் நீ தடுக்கிறாயே, அது என்ன நியாயம்?''

ராம்குமாருக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை. ஒரு கணம் மௌனமாக இருந்தான்.

''அடடே என் மேல கோபமா குமார்...... உன் மனம் நோகணும்னு நான் இப்படிப் பேசலே. நாட்டு நடப்ப நீ நன்னாப் புரிஞ்சுக்கணுமேன்னுதான் சொன்னேன். டேக் இட் ஈஸி பிரதர். ஹேவ் எ நைஸ் ஜெர்னி.....''

ராம்குமாரின் முதுகில் மெல்லத் தட்டிவிட்டு, பெட்டியை விட்டுக் கீழே இறங்கிய சேகர், ''பை... பை'' என்று சொல்லிவிட்டு பிளாட்பாரத்தை விட்டு வெளியே வந்தான்.

தான் சொன்னது ராம்குமாரின் மனத்தில் நன்றாகப் பதிந்துவிட்டிருக்கும்... பயல் திருச்சியிலிருந்து திரும்பி வந்ததும், புது ஆளாக இருப்பான். நமக்கு இனி தொந்தரவு இல்லை... நினைத்ததைச் சாதிக்கலாம்... என்று நினைத்துக் கொண்டே ஸ்டேஷனை விட்டு வெளியே வந்த சமயம், தனது தோளை யாரோ அழுத்துவது போலத் தெரியவே, திரும்பிப் பார்த்தான் சேகர்.

''குமார்...... என்ன இது? வண்டிய விட்டு ஏன் வந்தே....? இந்நேரம் வண்டி...'' என்று கேட்டுக் கொண்டே ஸ்டேஷன் உட்புறம் பார்க்க, பிளாட்பாரம் காலியாக இருந்தது!

''சேகர்... நீ சொன்னது போலவே, அத வாங்க மட்டுமல்ல, கொடுக்கவும் கூடாது என்பதிலும் இனி நான் உறுதியாயிருப்பேன். ஒழுங்கா ரிசர்வ் பண்ணிட்டே திருச்சிக்குப் போகலாம்னு இருக்கேன்....''

யாருடைய பலவீனத்தைக் கண்டு விட்டதாக நினைத்தானோ, அவன் இப்படி மேலும் உறுதியுடன் தன் முன் வந்து நிற்பான் என்பதையோ, தன் யோசனைக்கு இப்படியோர் எதிர் அர்த்தம் கொள்வான் என்பதையோ துளியும் எதிர்பார்க்காத சேகர், அதிர்ச்சியில், ராம்குமார் போவதையே வெறிக்கப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தான்!



''இந்த பலே கில்லாடியை எப்படி பிடிச்சே?''

''எனக்குப் பிரமோஷன் வாங்கிக் கொடுத்த புண்ணியம் உனக்குன்னு சொல்லிக் கால்லே விழுந்தேன், சார்!''

- சிவம்.



**மா**ஜிக் என்றாலே நமக்குப் பிரமிப்பு! மாஜிக் நிபுணர்களிடையே, போட்டி என்றால் கேட்கவே வேண்டாம்! அதிலும் உலகமகா மாஜிக் நிபுணர்களிடையே நடக்கும் போட்டியில் நம்மில் ஒருவனான பதின்மூன்று வயதுச் சிறுவன் சக்கைப் போடு போட்டுச்சிறப்புப் பரிசும் பெற்றான் என்றால்......!

பதினெட்டாவது அகில உலக மாஜிக் நிபுணர்கள் போட்டி, ஜூலை 8 முதல் 13 வரை ஸ்விட்சர்லாந்தில் நடந்தது. போட்டியை நடத்திய மாஜிக் நிபுணர்களின் சங்கங்களுக்கான கூட்டமைப்புத்தான், இப்படி நம் நாட்டுச் சிறுவனைக் கௌரவித்திருக்கிறது!

சிறுவன் பெயர் தேஜஸ்வி. அப்பாவின் பெயர் சங்கர் என்பதால், இவனை 'ஜூனி

# உலக மாஜிக் நிபுணர்களை அசத்திய ஜூனியர்!

யர் சங்கர்' என்றே குறிப்பிடுகிறார்கள். உடுப்பியில் கிறிஸ்டியன் ஹைஸ்கூலில் 8 ஆம் வகுப்பில் படிக்கிறான். அப்பாவும், அம்மாவும் கூட மாஜிக் நிபுணர்கள்தாம்!

ஜூனியர் சங்கர் மூன்று வயதாயிருக்கும்போதே அசத்திய அசத்தலில் அதிர்ந்து போய், அமெரிக்க மாஜிக் நிபுணர்கள் சங்கம் 'உலகின் குட்டி மாஜிக் நிபுணன்' என்ற பட்டத்தைக் கொடுத்திருக்கிறது.

நியூயார்க்கிலுள்ள மன்ஹாட்டனில் இந்த மூன்று வயதுப் பையனின் நிகழ்ச்சிக்கு 50,000 பேர் வந்திருந்தார்கள். பிறகு, நாலாவது வயதில் ஒருமுறை கையைக் காலைக் கட்டி, பெட்டிக்குள் அடைத்து சீல் வைத்து விட, பத்தாவது செகண்டுக்குள், கட்டுக்கள் எதுவுமே இன்றி அரங்கத்திலிருந்து வெளிப்பட்டு 'ஹௌடினி ஆஃப் இந்தியா' என்ற பட்டத்தைத் தட்டிச் சென்றவன் தேஜஸ்வி.

நியூயார்க் இந்தியன் அசோசியேஷனில் முதல் மாஜிக் ஷோவை நடத்தியவன், இப்போது லூசன், ஜெனீவா, ஜூரிச் ஆகிய இடங்களில் நிகழ்த்திய பிறகு, மொத்த எண்ணிக்கை ஆயிரத்தைத் தாண்டிவிட்டது!

இவன் பெயர் கின்னஸ் புத்தகத்தில் இந்த வருடம் வெளியாகிறது - ஒன்பதே வருடத்தில் 1000 நிகழ்ச்சிகள் வழங்கியதற்காக! அதிலும் இந்தப் பதின்மூன்று வயதுக்குள்!

ஜப்பான் டீவியிலும், ஜூனியர் சங்கர் மேஜிக் ஷோ நடத்தியிருக்கிறான். ''இப்போது செப்டம்பர் முதல் வாரத்தில் லண்டன், ஹாலந்து டீவி நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ள அழைப்பு விடுத்திருக்கிறார்கள். போகப் போகிறேன்!'' என்கிறான் சந்தோஷமாக. 1994 வரை இப்போதே அயல் நாடுகளில் புக்கிங் ஆகியிருக்கிறது சங்கருக்கு!

''என்னுடைய பாணி மேற்கத்திய கிழக்கத்திய பாணிகள் இரண்டும் சேர்ந்தது!'' என்கிறார் புரொபசர் சங்கர். பையனும் டிட்டோ.

மாஜிக்கில் இனி இவன் வாங்க ஏதாவது அவார்டு இருக்கிறதா என்றே தெரியவில்லை - அவ்வளவு நீளப்பட்டியல். பெரும் பகுதி வெளிநாடுகளில் வாங்கியது!

''எல்லாம் சரிதான், விலைவாசி குறைய ஏதாவது மாஜிக் இருக்கிறதா?'' என்று கேட்டால், ''ஓ! நாலாந்தர அரசியல் வாதிகளை மாயமாய் மறைந்து போகச் செய்கிற மந்திரக் கோல், வோட்டு வடிவில் மக்களிடம்தானே இருக்கிறது!'' என்று பதில் சொல்கிறான் இந்தக் குட்டி மந்திரவாதி. தேஜஸ்வி என்ற பெயர் பொருத்தமாகத்தான் இருக்கிறது!

– சித்தார்த்

# நேற்றுவரை நந்தவனம்

சோபாவின் ஒரு மூலையில், சாய்த்து வைத்த பொட்டலம் போல உட்கார்ந்திருக்கும் அப்பாவை, வைத்த கண் வாங்காமல் பார்த்தாள் மீரா.

'ஓ'வென அழுது தீர்த்தால் தேவலை போல, துக்கம், தொண்டையை அடைத்தது அவளுக்கு..

ராஜேஸ்வரி அம்மாள், பரபரவென ஓடிப் போய் காப்பியைக் கலந்து கொண்டு வந்து, அவர் எதிரில் வைத்தாள்.

''முதல்ல காப்பியைக் குடிங்க.. அப்புறம் பேசலாம்...''

அவர், அந்த அம்மாளை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்துத் தலையசைத்தார்.

குமரன், அவரது எதிர் சோபாவில்... இடது கை ரேகைகளை வலக் கை விரலால் அழுந்தத் தேய்த்து விட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

இளவரசு மட்டும்தான் இந்தச் சூழ்நிலையிலிருந்து மாறுபட்டவனாய் மீராவின் முதுகில் உப்பு மூட்டையாய்த் தொங்கினான்.

''வா.. விளையாடப் போகலாம்.''

''ஷ்... இரு...''

மீரா, ரகசியமாய் அவன் காதில் கிசுகிசுத்தாள்.

''காப்பி குடிங்க... பல் விளக்கணும்னா... மீரா, அ ழை ச் சி ட் டு ப் போயேன்.''

அவர், ராஜேஸ்வரிக்குப் பதிலளிக்கும் பாவனையில் தலையசைத்தார்.

''ஸ்டேஷன்லேயே காப்பி குடிச்சிட்டேன்.. இன்னிக்குக் காலையில ஒரு வேளை காப்பி. ராத்திரி ஒரு தம்ளர் பால்தான் குடிப்பேம்மா. நடுவுல சுத்த விரதம். ஒவ்வொரு சனிக்கிழமையும் இப்படித்தான்...''

அனுராதா ரமணன்

''சனிக்கிழமை நான் கூட விரதம் இருக்கறது உண்டுங்க. ஆனா, ஒரு பொழுதுதான். வயசான காலத்துல முழுப் பட்டினி கிடந்தா உடம்பு வாய்வு கொண்டுடும்னு சொல்லுவாங்க...''

ராஜேஸ்வரி மிக யதார்த்தமாய்ப் பேசினாள்.

இப்பொழுது மீராவின் அப்பா மெல்லியதாய் - மூன்றாம் பிறைக் கீற்று போலச் சிரித்தார்.

''இனிமே இந்த உடம்புல என்ன வந்தா என்ன.. நான் சனிக்கிழமை, வெள்ளிக்கிழமை விரதமெல்லாம் சுத்த ஹம்பக்னு ஒரு காலத்துல சொல்லிச் சிரிச்சிருக்கேன்.



என் பொண்ணுக்கு ஆக்ஸிடென்ட்டுல ரெண்டு பாதமும் கருகினப்ப வேண்டிட்டேன். 'சனிக்கிழமை தோறும் முழுப் பட்டினி இடக்கறதா...' இப்ப கால் சரியாயிடுத்து.. ஏன் இறக்கை கூட முளைச்சிடுத்து.. அதுக்காக என் விரதத்தை விட முடியுமா...''

மீராவினுள் அப்பாவின் ஒவ்வொரு வார்த்தையும் ஈட்டிச் செருகலாய்...

அவள், குழந்தையை இறக்கி விட்டு, மௌனமாய்க் காப்பி தம்ளரைக் கொண்டு போய் உள்ளே வைத்தாள்.

சற்று நேரம் சமையலறையிலேயே நின்றால், வெளியே உருவாகியுள்ள பனி மூட்டம் கலையாதா என்று நினைத்தாள்.

'கண்டிப்பாய்ப் போஸ்டர் கிடைத்துத் தான் அப்பா புறப்பட்டு வந்திருக்க வேண்டும்..'

'ஐயோ, அம்மா என்ன பாடுபட்டிருப் பாள்?'

மீராவுக்கு, தான் தஞ்சாவூர் ஸ்டே ஷனை விட்டு ஊருக்குள் வரும் போது பார்த்த குமரனின் புகைப்படத்துடன் கூடிய வண்ணச் சுவரொட்டிகள்தான் நினைவுக்கு வந்தன.

இப்போதும் - ஸ்டேஷனைஒட்டியுள்ள சுவரில் சுவரொட்டிகள் இருக்கும்...

அப்பாவின் தலையைக் குனிய வைப்பதாய், உடம்பைக் குன்றச் செய்வதாய்...

அவள் மெதுவாய்க் கூடத்தை எட்டிப் பார்த்தாள்.

குமரன் ஏதோ அதிகாரிக்குப் பயந்த குமாஸ்தா போல, பணிவாய் பேசிக் கொண் டிருந்தான்.

மீராவின் தந்தை - அவனது முகத்தையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார்.

''நடந்து போன விபத்துக்குக் காரணம் யாருன்னு தேடி அலையறதை விட, இனிமே எப்படி வாழறதுன்னு கொஞ்சம் யோசிக்கலாம்னு நான்தான் மீராகிட்ட.... உங்க டாட்டரும் அத்தனை கலபத்துல ஒத்துக்கலை. ரெண்டு நாள் முன்னாலே, மிஸ்டர் கீர்த்தியோட அம்மா, அப்பாவைப் போய்ப் பார்த்துட்டு வந்தாப்பல... அவங் களும் மீராவோட எதிர்காலத்தைப் பத்தி ஒரு நல்ல முடிவாத்தான் இந்தக் கல்யா ணத்தை...

''இந்த போஸ்டர்ஸைப் பத்தி நீங்க ஒண்ணும் மனசைப் போட்டுக் குழப்பிக்க வேண்டாம் சார். மீராவை நான் கல்யாணம் செஞ்சுக்கறதுன்னு தீர்மானிச்சாச்சு. அப்பு றம், யார் என்ன சொன்னா என்ன...

''மேலும், அரசியல்தான் வாழ்க்கை யின்னு ஆன பின்னே, இதுக்கெல்லாம் பயந்திட்டிருக்க முடியாது. எப்பவும் எதிரெதிர்க் கட்சிக்காரங்க கண்ணுல





''பத்திரிகைச் சுதந்திரம்னா என்னங்க?''

''என் அனுமதியில்லாமலேயே எங்க வீட்டுக்கு வர்ற பத்திரிகையை நீங்க படிக்க எடுத்துட்டுப் போயிட றீங்களே. அதுதான்!''

- ஞா. ஞானமுத்து.

என்னைய விட்டுட்டு - எவன் மேல என்ன குத்தத்தைச் சுமத்தலாம்னு பார்த்துட்டே இருப்பாங்க...

''கடைசியா... ஒன்னே ஒன்னை மட்டும் சொல்ல விரும்பறேன். நானும், மீராவும் அமைதியான முறையில வாழ விரும்பறோம். என் குழந்தை இளவரசு - செத்துப் போன தன் அம்மாவுக்கு அடுத்த படியா மீரா கிட்டத்தான் உசிரையே வச்சி ருக்கான். யோசிச்சுப் பாருங்க... வாழ்க்கை யில எத்தனையோ விஷயங்கள் மறுபடி மறுபடி நடக்கறது.. செடியில ஒரு கிளைய வெட்டினா இன்னொரு பக்கம் துளிர்க் கிறது... இவன்தான் வெட்டிட்டானே யின்னு புலம்பிட்டு மண்ணோட மடியற தில்லே.. மனுஷங்க செய்யற அத்தனை அடாவடித்தனத்தையும் பார்த்திட்டிருக்கற சூரியன் - சாயந்திரம் மலையில விழுந்தா லும் மறுநாள் அஸ்தமிக்கிறதில்லையா... மனுஷங்க மட்டும் எதுக்காக ஒரு தடவை பாதிக்கப்பட்டா - அப்புறம் வாழ்க்கையே இல்லையின்னு நினைக்கணும்? இது என்னோட சுபாவம்... மீராவைச் சந்திக்கற வரைக்கும் நானும் - என்னைத் தனிமரமாத் தான் நினைச்சிட்டிருந்தேன். இப்பத்தான் புரியுது - இன்னொரு தனிமரத்தையும் நம்ம கூட சேர்த்துட்டாத் தோப்பாயிட லாம்னு...''

குமரன் இவ்வளவு பேசியதே அதிகம். மீராவுக்கே வியப்பாக இருந்தது.

என்றைக்குமே குமரன், இத்தனை வார்த்தைகளை விரயம் செய்ததில்லை. தறுக்காக நாலு வார்த்தை பேசி விட்டு, அந்த இடத்தை விட்டு நகர்ந்து கொண்டே இருப் பான்.

'இன்று இவ்வளவு பேச்சும் நமக் காகவா?'

மீராவின் நெஞ்சு ஒருமுறை ஏறியிறங் கியது.

குமரன், இளவரசுவைத் தூக்கிக் கொண்டு எழுந்தான்.

''சார்... முதல்லே அலுப்புத் தீரக் குளிங்க. எனக்கு சாமி நம்பிக்கை கிடை யாது. ஆனா, அதுக்காக மத்தவங்க நம்பிக் கையக் கேலி செய்ய மாட்டேன். மீராவோட நன்மைக்காகச் சனிக்கிழமை விரதமிருக் கறதாச் சொன்னீங்க. இன்னிக்கு நீங்க எடுக்கப் போற முடிவும் மீராவோட நன்மையக் கருதித்தான்.. உங்க முடிவு நல்ல முடிவா இருக்கணும்னு நானும் கூட விரதமிருக்கப் போறேன். எங்க கல்யாணம் நல்லபடியா நடந்தா ஆயுசு முழுக்க ஒவ் வொரு சனியும் முழுப் பட்டினிதான். இதை நான் சந்தோஷமாக் கொண்டாடுவேன்..''

அவன், தன் அறைக்குள் நுழைய, மீரா வின் தந்தை, மகளைத் தேடி, சுற்று முற்றும் பார்த்தார்.

மீரா, குறிப்புணர்ந்து அவரெதிரில் வந்து நின்றாள்.

''உன் கூட கொஞ்சம் தனியாப் பேச ணும் மீரா...''

''மாடிக்குப் போகலாமா?''

''இங்கே வேண்டாம்.. வெளில எங்கே யாவது...''

''பிரகதீஸ்வரர் கோவிலுக்குப் போக லாமா...''

''உம்...''

அடுத்த அரை மணி நேரத்தில் ஞானத் தின் ஆட்டோவில் பெரிய கோவிலை நோக்கிச் சென்றார்கள்.

மீராவின் அப்பா, மகளின் மடியில் தலை சாய்த்துக் கட்டை விரலைச் சூப்பிக் கொண்டிருந்த இளவரசுவையே ஒரு வினாடி இமைக்காமல் பார்த்தார்.

''பையன் பசை போட்டாப்பல ஒட்டிட் டிருக்கானே...''

மீரா புன்னகை செய்தாள். அவளது விரல்கள் அவளையுமறியாமலே குழந்தை யின் வெல்வெட் போன்ற தலை முடியை வருடிக் கொடுக்க -

பிரகதீஸ்வரர் கோவிலில், சமீபத்தில் தனக்குப் பழக்கமான - பிராகாரத்தில் நிழ லான இடம் தேடி உட்கார்ந்தாள் மீரா.

உள்ளே நுழையும்போதே, இளவரசு வுக்கு ஒரு பொம்மை முகமூடியை வாங்கி மாட்டி விட்டிருந்தாள்.

சிறுவன், அதிலேயே லயித்து விட்டி ருந்தான்.

''சொல்லுங்க அப்பா.''

''இந்த முடிவுக்கு ஏன் வந்தே மீரா?''

''எந்த முடிவுக்கு?''

''நம்ம ஜாதியில்லேங்கறதுக்காக நான் சொல்லலை. நான் அதையெல்லாம் பாராட்டறவன் இல்லேங்கறதும் உனக்குத் தெரியும். போயும் போயும் ஒரு அரசியல்

வாதி... பெரிய படிப்போ, ஸ்திரமான உத்தியோகமோ கிடையாது. இவங்களுக்குத் தெரிஞ்சதெல்லாம் அடியும், உதையும்தான். உனக்கு வேற நல்ல இடமே கிடைக்காதுன்னு தீர்மானம் செஞ்சிட்டியா?''

''அரசியல்வாதிங்களிலேயும் மனுஷங்க இருக்காங்க... அவங்களுக்கும் குடும்பம், குழந்தைங்கன்னு உண்டு...''

''இது நீயா ஆசைப்பட்டுத் தேர்ந்தெடுத்த முடிவான்னு எனக்குத் தெரியணும் மீரா. உங்கம்மா அங்கே புலம்பிட்டே இருக்கா. அவன், உனக்கு ஆஸ்பத்திரியில செஞ்ச உதவிக்கு பிரதியுபகாரமாத்தான் இந்த தியாகத்தைச் செய்யத் துணிஞ்சிட்டேயின்னு...''

மீரா இடைமறித்தாள்.

''தியாகமா.. அவர்கிட்ட என்ன இல்லேயின்னு நீங்க இப்படிப் பேசறீங்க... இல்லே, ஒசத்தியா நினைக்கக்கற மாதிரி என்கிட்டத்தான் என்ன இருக்கு?''

''நிச்சயமாப் படிப்பு இருக்கு. கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவங்கற பெருமை இருக்கு. இந்த அளவு பணமில்லையின்னாலும் - நாம ஒண்ணும் அடுத்த வேளை சோத்துக்கு லாட்டரி அடிக்கலே...''

மீரா - பிரும்மாண்டமாய் உயர்ந்து, கம்பீரமாய் அமர்ந்துள்ள நந்தியையே பார்த்தாள்.

''அப்பா... இந்தக் கோவிலையே எடுத்துக்குங்க.. தமிழ்நாட்டுல பார்க்க வேண்டிய ஒன்று... வெளிநாட்டுக்காரங்க எல்லாம் இந்தக் கோவிலோட அருமை தெரிஞ்சு, தேடி வந்து பார்க்கறாங்க. நாம, தமிழ் நாட்டுலேயே இருக்கோம். எத்தனை பேர் இங்கே பூஜை செய்ய வர்றாங்கன்னு விரல் விட்டு எண்ணிடலாம். இங்கே வர்ற கும்பலை விட - டவுன்லே இருக்கற ஒரு பிள்ளையார் கோவிலுக்கு கும்பல் ஜாஸ்தி.. இதனால இங்கே சாமி இல்லேயின்னு சொல்லிட முடியுமா? இல்லே - இந்தச் சாமிக்குத்தான் சக்தியில்லேன்னு சொல்லிட முடியுமா... இது ஒரு அழகு... தன்னந்தனிமையில நிமிர்ந்து நிக்கற அழகு...

''குமரனையும் நான் அப்படித்தான் நினைக்கிறேன். படிப்புக்கும், மணவாழ்க்கைக்கும் சம்பந்தமிருக்கறதா எனக்குத் தெரியலே.. அவருக்கு வேகமா இங்கிலீஷ் பேசவராது. ஒத்துக்கறேன். ஆனா - சரளமாத் தமிழ் பேசுவார். மனசுல இருக்கற எண்ணத்தை வெளிப்படுத்தத் தாய்மொழி போதும்.. இன்னும் சொல்லப் போனா இங்கிலீஷ்லே, 'ஐ லவ் யூ'--ன்னு சொல்ற ஆம்பிளையை விட, தமிழ்லே, 'உன்னை எனக்குப் பிடிச்சிருக்கு'ன்னு சொல்றவன் எவ்வளவோ உசத்தியின்னு நான் நினைக்கிறேன்...

''அடி உதை - அரசியலே அவர் வந்த வழியா இருக்கலாம். அது அவருக்கும் வெளியுலகுக்கும் இருக்கற விவகாரம்.. பெண்டாட்டிய அடிச்சு, அறைக்குள்ள பூட்டிட்டு, வெளியில அஞ்சு நட்சத்திர ஹோட்டல்லே - உமன்ஸ் லிபரேஷன் பத்திப் பேசறவனை விட இவர் பெரிய உத்தமர் இல்லையா...''

அப்பா, மேல் துண்டை உதறித் தோள் மீது போட்டபடி எழுந்தார்.

''நீ இவ்வளவு தீர்மானமா இருக்கறப்ப நான் வேற என்ன சொல்ல முடியும்...''

இளவரசு, முகமூடியை மாட்டிக் கொண்டு ஓடி வந்து, மீராவின் முன் குதித்து - 'ஹோ'வெனக் கூச்சலிட - மீரா, பயந்தாற் போல நடித்தாள்.

''அச்சோ, பயமா இருக்கே!''

''ஐயய்யே... நான்தான்..''

சிறுவன் முகமூடியைக் கழற்றி விட்டுச் சிரித்தான்.

''முகமூடியைப் பார்த்து பயப்படறது மாதிரி - சிலரோட முகமூடியக் கழட்டிட்டா - ஒரிஜினல் முகம் நம்மைத் திடுக்கிட வைக்கலாம் மீரா. அழகான முகமூடிக்குள்ள இருக்கற முகம் - ராட்சசத்தனமா இருந்துட்டா... பார்த்து நடந்துக்க. உனக்கு நான் என்ன சொல்றதுக்கு இருக்கு?''

மீராவின் பதிலுக்குக் கூட காத்திராமல் அவர் நடக்க ஆரம்பித்தார்.

(தொடரும்)

---

''உடம்பு புண்படும்படியா ரெண்டு அடி அடிச்சிடலாம்; ஆனா மனசு புண்படும்படி ஒரு வார்த்தை கூட யாரையும் பேசக் கூடாதுன்னு என் மருமகளுக்கு 'அட்வைஸ்' செய்தது தப்பாப் போச்சு...''

''ஏன்... என்னாச்சு?''

''என் உடம்பெல்லாம் புண்ணாக்கிட்டாளே!''

- செங்குன்றம் ஜெமால்.



# இவ்விடம் கின்னஸ் சாதனைகள் உடைக்கப்படும்

## காட்சி - 1

(விடியற்காலையிலிருந்தே நடிகை பார்கவியின் பங்களா அல்லோலகல்லோலப் பட்டுக்கொண்டிருக்கிறது. பார்-அட்-லா முதல் பொமரேனியன் வரை ஒரே பரபரப்புடன் காணப்படுகின்றனர். ஹாலில் நடிகை பார்கவி கோபத்துடன் சட்டியில் விழுந்த விட்டில் பூச்சி மாதிரி அங்குமிங்கும் நடந்து கொண்டிருக்கிறாள்)

பார்கவி : (கோபம் கொப்புளிக்க) என்ன திமிர் அந்த ஆளுக்கு? சும்மாவிடப் போவதில்லை அவனை. கோர்ட்டுக்கு தரதரன்னு இழுத்து வரப் போறேன். நான் மான நஷ்ட ஈடாக் கேக்கப் போற காம்ப்பன்சேஷன் தொகையைக் கேட்டு, அவன் அல்சேஷன் மாதிரி நாக்கைத் தொங்கப் போட்டுக்கணும், இல்லே என்னைப் பத்திக் காட்டுத்தனமா எழுதின அவனோட விரல்கள் காலமெல்லாம் கம்பி எண்ணியே தேஞ்சு போகணும்.

(ஒரு காகிதக் கட்டுடன் அடுத்த அறையிலிருந்து வருகிறார் வக்கீல் வஜ்ரவேலு)

வ.வஜ்ர : நீங்க ஒண்ணுக்கும் ஒர்ரி பண்ணிக்க வேணாம் மேடம். ஏகப்பட்ட செக்ஷன்ல இழுத்துப் போட்டிருக்கேன் அவனை. ஒண்ணுல திமிறினாலும் அடுத்துல அகப்பட்டுக்குவான்.

பார்கவி : (சலிப்புடன்) ஆமா, போன வருஷம் இப்படித்தான் என்னைப் பத்தி அபாண்டமாக் கிசுகிசு செய்தியைப் போட்ட சினிரசம் ஆசிரியரை உண்டு இல்லைன்னு பண்ணிடறேன்னு சபதம் போட்டீங்க. கடைசியில் துண்டு இருக்கா துணி இருக்கான்னு தப்பிச்சதே தம்பிரான் புண்ணியம்னு ஓடிவந்து நின்னீங்க. அதை இன்னும் நான் மறக்கலே, ஞாபகம் வெச்சுக்குங்க.

வ.வஜ்ர : (சமாளித்துக் கொண்டு) அது.... வந்து... அந்தக்கேஸில... பௌண்டேஷனே ஒரு கிசுகிசு... அதனாலே பிசுபிசுத்திருச்சு. ஆனால் இந்த கேஸ் இருக்கே - அசல் காங்க்ரீட். மேலே வந்து எவன் மோதினாலும் அவனுக்கு முட்டி பேந்துடும்.

பார் : எப்படியோ இந்த ஒரு கேசு, பின்னாடி ஒன்பதாக் குட்டி போடாம இருந்தாச் சரி. அந்தப் பழைய கேஸில் ரொம்பத்தான் பெரிய மேதை மாதிரி பாவ்லா காட்டி, அந்த எடிட்டருக்கே பாயிண்டுகளை எடுத்துக் குடுத்து, அதை வச்சு அந்த ஆளு நம்ம மேலேயே எதிர்க் கேஸ் போட்டு ஜெயிச்சதை இன்னும் நான் மறக்கலே.

வ.வஜ்ர : (பல்லைக் கடித்துக் கொண்டு - தனக்குள்) இதையெல்லாம் மறக்காமல் ஞாபகம் வச்சிட்டிரு. டைரக்டர் ஆயிரம் தடவை தலையில் அடிச்சுச் சொல்லிக் கொடுத்தாலும் முக்கால் வசனத்தை முழுங்கிட்டுக் கால் வசனத்தைக் கடைவாயில் வச்சுட்டு, காமிராவுக்கு முன்னாடி கோட்டை விடு....

(டெலிஃபோன் ஒலிக்கிறது. ரிசிவரை எடுக்கிறாள் நடிகை பார்கவி)

பார் : ஹலோ.... (ஒரு நிமிடம் கேட்டிருந்துவிட்டு, கோபத்தால் முகம் சிவக்க 'டொக்' கென்று ரிசீவரை வைக்கிறாள். பிறகு முகத்தில் கோப ஜ்வாலை எரிய) என்ன அகங்காரம்.



என்னதான் கையில் படங்கள் இல்லையென்றாலும் இந்த நிலைக்கு நான் வந்திருப்பது ரொம்பவும் வருத்தம் தருதாம் இவளுக்கு. என்ன ஒரு கிண்டல்.... நக்கல். நாளைக்கு இவளைப் பத்தியும் ஒரு கிசுகிசு வராமலா போய் விடும். அப்போ விசாரிக்கிறேன் இவளை.

*(ஹாலை ஒட்டியுள்ள அறையின் கதவோரமாக நின்று இங்கு நடப்பதையெல்லாம் கவனித்துக் கொண்டிருக்கிறான் சமையல்காரன். அவனுக்குப் பின்புறமாய் வந்து அவனுடைய காதில் கிசுகிசுக்கிறான் தோட்டக்காரன்)*

**தோ. காரன் :** *(கிசுகிசுப்பான் குரலில்)* என்ன விஷயம்? அம்மா ஏன் இப்படிச் சத்தம் போடறாங்க?

**சமையல்காரன் :** *(எரிச்சலாக)* சை. என்ன வீடய்யா இது? எல்லாமே கிசுகிசுப்புதானா? என்னாலும் பதிலுக்கு உங்கிட்டே கிசுகிசுக்க முடியாது. சத்தமா, விவரமாச் சொல்றேன். தோட்டப்பக்கம் போலாம். வா.

*(தோட்டக்காரனை இழுத்துக் கொண்டு போகிறான்)*

## காட்சி - 2

### (தோட்டத்தில்)

**சமையல்காரன் :** புரிஞ்சுதாய்யா இப்போ?

**தோ. காரன் :** ஓஹோ விவகாரம் அப்படிப் போகுதா? அந்தச் சினிமா நிருபர் அம்மாவைப் பேட்டிகாண திடீர்னு வீட்டுக்குள் நுழைஞ்சப்போ, அம்மா நாய்க்குட்டி ராணியை வவுத்துல தட்டிக் குடுத்துட்டு இருந்தாங்களா?

**சமையல் :** இப்போ உன் முதுகைத்தான் நான் தட்டப் போறேன். உன் காது இருக்கிற கதிக்கு கிசுகிசுப்பு வேற கேக்குது உனக்கு. மறுபடியும் சொல்றேன். நல்லாக் கேட்டுக்கோ. அந்த நிருபர் உள்ளே நுழைஞ்சப்போ அம்மா ஒரு ஆணியை செவுத்துலே அடிச்சிட்டிருந்தாங்க புரிஞ்சுதா?

**தோ. காரன் :** புரியுது. புரியுது. *(யோசித்தபடி)* ஆனா.... செவுத்துலே ஆணியை அடிக்கறதுலே என்ன தப்புன்னு தான் புரியலே.

**சமையல் :** நீயும், நானும் அடிச்சிருந்தாத் தப்பில்லே. எவனும் சட்டை பண்ணியிருக்கவே மாட்டான். ஆனா, சினிமா உலகில் இன்னும் கொடிகட்டிப் பறக்கிறதா நெனச்சிட்டிருக்கிற ஒரு நடிகையைப் பத்தி அப்படி ஒரு செய்தி பத்திரிகையில் வெளிவந்தா அர்த்தம் எப்படிப் போகும் தெரியுமா? நடிகைக்குக் கைவசம் படம் இல்லை...... மார்க்கெட் அவுட்....

**ஜீனோ**

**தோ. காரன் :** அடப்பாவமே, பத்திரிகையிலும் போட்டுட்டானா?

**சமையல் :** அந்தச் செய்தியை அப்படியே போட்டிருந்தாலும் விஷயம் இந்த அளவுக்கு முத்தல் கேஸ் ஆகியிருக்காது. ஆணிக்கு பதிலா, செவுத்திலே அம்மா சாணி தட்டிட்டிருந்தாங்கன்னு போட்டுட்டான்.

**தோ. காரன் :** *(தடால் என்று எழுந்து நின்று)* அடப்பாவிகளா! என்னய்யா அக்கிரமம் இது?

**சமையல் :** *(தோட்டக்காரனை இழுத்து உட்காரவைத்து)* உட்காரய்யா, என்னமோ நியாயம் கேக்கப் போற ஆம்பள கண்ணகி மாதிரி எந்திரிச்சிட்டே. மிச்சத்தையும் கேளு. பத்திரிகையில் அந்தச் செய்தி வந்ததும் போன் மேலே போனு. ஆளுக்கு ஆளு ஏம்மா போயும் போயும் இந்த வறட்டி பிஸினஸை செலக்ட் பண்ணினீங்கன்னு துக்கம் விசாரிக்கறதும், வெண்டைப் பிஞ்சு மாதிரியான உங்க அழகான விரல்களுக்காகவே அந்தப் படத்தை அம்பது தடவை பார்த்தேன். கடைசியில் சாணி தட்டவா அது



சரணாகதி ஆர்க்கன்னு உருகி உருகி ரசிகர் கடிதங்கள் வந்து குவியறதும்...

**தோ. காரன் :** (இடைமறித்து) அப்படிச் சொல்லு. இப்போ அம்மா அந்த நிருபர் மேலே கேஸ் போடப்போறாங்க. அதானே விஷயம்? ஆனா இந்த வஜ்ரவேலு அவ்வளவு ஸ்ட்ராங்கான வக்கிலா எனக்குத் தோணலேப்பா.

**சமையல் :** ஸ்ட்ராங்காவது, லைட்டாவது. முதல்லே அந்த ஆள் ஒரு வக்கிலான்னே எனக்குச் சந்தேகமாயிருக்கு. போலி டாக்டர், போலி இன்ஸ்பெக்டர்னு அடிக்கடி பேப்பர்ல வருதே அதுமாதிரி இவர் போலி வக்கிலோன்னு தோணுது.

**தோ. காரன் :** அதோ நம்ம பங்களா வாட்ச்மேன். அந்த ஆளுகிட்டே வஜ்ரவேலுவைப் பத்திக் கேட்டுப் பாக்கலாமா?

**சமையல் :** சும்மா இருப்பா. இது வரைக்கும் தூக்கத்திலே நடக்கற வியாதியைத் தான் கேள்விப் பட்டிருக்கிறோம். நம்ம வாட்ச்மேனுக்கோ தூக்கத்திலேயே படிக்கிற வியாதி. ஒரு புஸ்தகத்திலே தலையை நுழைச்சிட்டான்னா, ஒரு யானைக் கூட்டமே வீட்டுக்குள்ளே நுழைஞ்சாலும் கண்டுக்க மாட்டான். நாம போலாம் வா.

## காட்சி - 3

*(கோர்ட் நிரம்பி வழிகிறது. பார்வையாளர் வரிசையில் நடிகை பார்கவி அமர்ந்திருக்கிறாள். 'கசமுசா' பத்திரிகையின் ஆசிரியர் குற்றவாளிக் கூண்டில் உற்சாகமாக ஏறி நிற்கிறார். அவரை விசாரிப்பதற்காக நெருங்குகிறார் வக்கீல் வஜ்ரவேலு.)*

**வ.வஜ்ர :** நீர்தானே 'கசமுசா' பத்திரிகையின் ஆசிரியர்?

**ஆசிரியர் :** ஏழு தடவை என் ஆபீசுக்கு வந்து ஓசியில் டிபனும், காப்பியும் சாப்பிட்டுவிட்டு இப்படி ஒரு கேள்வியைக் கேட்கலாமா?

*(கோர்ட்டில் 'குபீ'ரென்ச் சிரிப்பலை எழுகிறது)*

**மாஜிஸ்திரேட் :** (மேஜையைத் தட்டி ) ஆர்டர்... ஆர்டர்....

**வ.வஜ்ர :** (நிலைதடுமாறி) ஓசியில் என்ற வார்த்தையை நான் வன்மையாக ஆட்சேபிக்கிறேன், கனம் கோர்ட்டார் அவர்களே!

**ஆசிரி :** (இடைமறித்து) வேண்டுமானால் 'என் காசில்' என்று சொல்லி விடட்டுமா?

*(மறுபடியும் பலத்த சிரிப்பு)*

**மாஜிஸ் :** ஆர்டர்.... ஆர்டர்...

*(மரச் சுத்தியால் மேஜையைப் பலமாகத் தட்டுகிறார்)*

**வ.வஜ்ர :** (படபடப்போடு) இது மாஜிஸ்திரேட் கோர்ட். மெரீனா பீச் அல்ல. மேலும் நீர் இங்கு என் கட்சிக்காரர் நடிகை பார்கவியின் எதிரொலி என்பதையும் மறந்துவிடக்கூடாது.

**மாஜிஸ் :** (வியப்புடன்) எதிரொலியா?

*(எதிர்த்தரப்பு வக்கீல் எழுந்து நிற்கிறார் - உற்சாகமாய்)*

**எ. வக்கீல் :** நண்பர் வஜ்ரவேலு அவர்கள் எதிராளி என்று சொல்ல நினைத்திருக்கிறார். அவருடைய வழக்கமான பதற்றத்தில் வேறுவிதமாக எதிரொலித்து விட்டார் என்று நினைக்கிறேன்.

*(நமுட்டுச் சிரிப்புடன் அமர்கிறார் எதிர்த்தரப்பு வக்கீல். மறுபடியும் கோர்ட்டில் சிரிப்பு அலைமோதுகிறது. பார்வையாளர் வரிசையில் அமர்ந்திருக்கும் நடிகை பார்கவி தலைமேல் கை வைத்துக் கொள்கிறாள்.)*

**மாஜிஸ் :** ஆர்டர்... ஆர்டர்... (தனக்குள் - மகா எரிச்சலுடன்) மேஜையைத் தட்டிக் கொண்டே இருப்பதுதான் என்னோட ஒரே வேலைன்னு நினைச்சுட்டாளுங்களா? (சப்தமாக) இந்த வழக்குக்குச் சம்பந்தப்பட்ட கேள்விகளை மட்டுமே கேட்க வேண்டும். அனாவசியமாக கோர்ட்டின் நேரத்தை வீணடிக்க வேண்டாம்.

**வ.வஜ்ர :** (ஆசிரியரை நோக்கி) இப்போது ஒழுங்காகப் பதில் சொல்லும், நீர்தானே 'கசமுசா' பத்திரிகையின் ஆசிரியர்?

**ஆசிரி :** ஆமாம்.

*(வெற்றிப் புன்னகையுடன், பார்வையாளர் வரிசையில் அமர்ந்திருக்கும் பார்கவியைப் பார்க்கிறார் வஜ்ரவேலு)*

**பார்கவி :** (பல்லைக் கடித்துக் கொண்டு) பெயரைக் கேட்டு முடிச்சதே பெரிய சாதனை போல் பார்க்கிறதைப் பாரு. ம்ஹூம்ஹூம். இந்த கேஸூம் உருப்படப் போறதில்லே.

**வ.வஜ்ர :** (மறுபடியும் ஆசிரியர் பக்கம் திரும்பி) கடைசியில் நீர்தான் கசமுசா பத்திரிகையின் ஆசிரியர் என்பதை ஒப்புக் கொண்டீர், இல்லையா?

**ஆசிரி :** இந்த ஒரு கேள்வியை வெச்சே இன்னைக்குப் பூரா ஓட்டிடலாம்னு முடிவு பண்ணிட்டீங்களா?

*(மீண்டும் பார்வையாளர் வரிசையில் பலத்த சிரிப்பு)*

**மாஜிஸ் :** (கோபத்துடன் மேஜையைத் தட்டி) விசாரணையை நாளைக்குத் தள்ளி




வைக்கிறேன். கோர்ட் கலையலாம்.

## காட்சி - 4

(தோட்டத்தில் சமையல்காரனும், தோட்டக்காரனும் அரட்டை அடித்துக் கொண்டு இருக்கின்றனர். வாட்ச்மேன் ஏதோ கத்திக் கொண்டு ஓடிவருகிறான்)

சமையல் : என்னய்யா இது, ஒரே ஆச்சரியமா இருக்கு. புஸ்தகப் புழு வாட்ச்மேன் பேசறதே அபூர்வம். இப்படிக் கத்திட்டு வர்ரான். எதையாச்சும் பார்த்து பயந்திருப்பானா?

வாட்ச்மேன் : (அருகில் வந்து - மூச்சிரைக்க) ரெகார்டுகளை உடைச்சுத் தள்ளிட்டாங்க... கன்னா பின்னான்னு... கணக்கு வழக்கே இல்லாமல்...

தோ. காரன் : அடடே, கிராமபோன் ரெகார்டுகளா? யார் உடைச்சது?

வாட்ச் : அதில்லே. இது கின்னஸ் ரெகார்டு. உலக சாதனை.

சமையல் : எங்கேயோ, யாரோ உடைச்சிருந்தா உனக்கும் எனக்கும் என்ன ஆச்சு? ஏன் இந்தக் கத்துக் கத்தறே?

வாட்ச் : எங்கேயோ, யாரோ உடைக்கலே. இங்கே - இதே பங்களாவில் - கின்னஸ் சாதனைகளை முறியடிச்சிருக்காங்கறது என்னோட கணிப்பு.

சமையல் : உன்னோட கணிப்பா?

வாட்ச் : ஆமா, கவனமாக் கேளுங்க. சாதனை நெம்பர் ஒன் : ஒரே ஒரு கேள்வியை வச்சு ஒரு நாள் முழுக்க கோர்ட்டில் வாதாடின ஒரே வக்கீல்....

சமையல் : நம்ம வஜ்ரவேலு?

வாட்ச் : கரெக்ட். சாதனை நெம்பர் டூ : ஒரே நாளில் மிக அதிகமான தடவை கோர்ட்டில் சிரிப்பு அலைகளில் தத்தளித்துப் போன பார்வையாளர்கள்.

சமையல் : நேத்தைக்கு நம்ம கேஸைப் பார்க்க வந்தவங்க?

வாட்ச் : அதிகரெக்ட். சாதனை நெம்பர் த்ரீ : ஒரு ஜலதரங்கக் கச்சேரி மாதிரி கோர்ட்டில் நாள் முழுக்க மேஜையைத் தட்டிட்டு இருந்த ஒரே மாஜிஸ்திரேட்....

சமையல் : அதுவும் நம்ம மாஜிஸ்திரேட்தானா?

வாட்ச் : நிச்சயமா அவரேதான். கடைசியா, சாதனை நெம்பர் ஃபோர் : உலகிலேயே மிக அதிகமான வேகத்தில் போட்ட கேஸை முப்பத்தாறு மணி நேரத்துக்குள்ளே வாபஸ் வாங்கின ஒரே நடிகை...

சமையல் : (குறுக்கிட்டு) என்னது, கேஸை வாபஸ் வாங்கிட்டாங்களா?



# வைதேகி கல்யாணம்

**வ**ழக்கம் போல ஒரு பெருந்தனக் காரரின் மகளுக்கும், ஓர் ஏழையின் மக னுக்கும் காதல்...

வழக்கம் போல அந்தப் பெருந்தனக் காரருக்கும் ஒரு பெண்ணுக்கும் ஏற்கெனவே ஏற்பட்டிருந்த தொடர்பின் விளைவாகப் பிறந்த ஒரு குழந்தை...

வழக்கம் போல அவளைப் பகிரங்க மாக மனைவியாக ஏற்றுக் கொள்ள அவர் மறுப்பு...

வழக்கம் போல மகளின் காதலைப் பற்றித் தெரிந்து கொள்ளும் பெருந்தனக் காரர் அவளுக்கும் இன்னொரு இளைஞ னுக்கும் ஏற்பாடு செய்யும் திருமணம்...

வழக்கம் போல கிளைமாக்ஸ்...

நல்லவேளை, வழக்கம் போல அம்மன் கோயில் நாட்டியம் இல்லை!

இந்த 'வழக்கம் போல...' கதையைக் கூட இப்படித்தான் கொண்டு செல்ல வேண்டும் என்று முன்னதாகவே நிர்ண யித்துக் கொள்ளாத காரணத்தால் கதை யோட்டத்தில் தடுமாற்றம்.

ஒரு கதாநாயகனுக்குரிய அத்தனை பளுவையும் துணிச்சலாகச் சுமக்க முன் வந்திருப்பவர் ராமார்ஜுன். தன் சகோதரி யின் கணவரைப் போல் அல்லாமல் நடிக்க முயற்சி செய்திருக்கிறார்.

கதாநாயகி உத்ராவைக் காதல் காட்சி களில் பார்க்கும் போது பாவமாக இருக் கிறது.

வழக்கம் போல தேவாவின் இசை - இனிமை!

– சி. ஆர். கே.

வாட்ச் : மடமடன்னு ஏழெட்டுப் படங்கள் புக் ஆயிடுச்சு. இனி உருப்படியாப் படப்பிடிப்பைக் கவனிப்பாங்களா, உருப் படாத கேஸை கவனிப்பாங்களா?

சமையல் : என்ன உளர்றே? சினிமா மார்க்கெட்டே குளோஸ். இனி காய்கறி மார்க்கெட்டுக்குப் போனாக் கூட என்னை யார் கண்டுக்கப் போறாங்கன்னு புலம் பிட்டு இருந்தாங்க. எங்கேயிருந்து வந்து குதிச்சது இத்தனை படங்கள்?

வாட்ச் : எல்லாத்துக்கும் மூலாதாரம் பரபரப்பான பப்ளிசிடிதான். இந்த பப்ளி சிடி எப்படி வந்ததுன்னு கேக்கறீங்களா? எல்லாம் இந்தச் சாணி தட்டின கேஸின் உபயம்தான்!

பரிசு

ரூ. 40,000

# கல்கி பொன்விழா நாவல் போட்டி

எழுத்தாளர்களின் ஏகோபித்த வேண்டுகோளுக்கு இணங்க, கல்கி பொன் விழா நாவல் போட்டியின் முடிவு தேதி, அக்டோபர் 31, 1991 வரை நீட்டிக்கப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| சரித்திர நாவலுக்குப் பரிசு (சுமார் 52 இதழ்கள்) | ரூ. 20,000/- |
| சமூக நாவலுக்குப் பரிசு (சுமார் 26 இதழ்கள்) | ரூ. 10,000/- |
| மர்ம நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. 5,000/- |
| விஞ்ஞான நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. 5,000/- |

முடிவு தேதி : அக்டோபர் 31, 1991

O இதற்கடுத்த ஒன்பது மாதங்களில் நாவல்களின் பரிசீலனை முடிந்து, கல்கி பொன் விழாச் சிறப்பிதழில் முடிவு வெளியாகும். பரிசு பெற்ற நாவல்களுள் ஒன்று அதே சிறப்பிதழில் ஆரம்பமாகும். அதாவது 1992 ஆகஸ்டு முதல் வார இதழ்.

O பிரசுரத்துக்கு ஏற்கப்படும் இதர நாவல்களுக்கு வழக்கமான சன்மானம் அளிக்கப்படும்.

O நடுவர் குழு நாவல்களைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய நாவல்களைத் தேர்ந்தெடுக்கும்.

O கல்கி பொன் விழா நாவல் போட்டிக்கு அனுப்பப்படுவதாகத் தெளிவாகக் குறிப்பிடுதல் அவசியம்.

O ஒவ்வொரு வாரமும் படத்துடன் சேர்த்துக் கல்கியில் 4 - 5 பக்கங்களுக்கு மேற்படாதபடி அத்தியாயங்களின் அளவை நிர்ணயிப்பது நல்லது.

O கடிதப் போக்குவரத்து கிடையாது.

O சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

O பிரசுரத்துக்கு ஏற்கப்படாத நாவல்களைத் திரும்பப் பெற போதிய அளவு தபால் தலைகள் இணைக்க வேண்டும்.

O அப்படித் திருப்பி அனுப்பவே அவசியம் நேராதபடி அற்புதமான நாவல்களை எழுதி அனுப்பிக் கல்கி பொன் விழா ஆண்டினைச் சிறப்பிக்குமாறு எழுத்தாளர் பெருமக்களை வேண்டுகிறோம்.

– ஆசிரியர், கல்கி, சென்னை - 600 032.

# பெண்மைக் கனல்

**ப**க்கத்து வீட்டுக்கு எழுத்தாளர் 'சிலன்' குடி வந்த போது பூமாவுக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை. அவளுடைய அபிமான எழுத்தாளர்! முழுப் பெயர் எஸ். ஏ. குணசிலனாம். அதைச் 'சிலன்' என்று சுருக்கி - ஒரு சின்னக் கிரணம் போதுமே சூரியனைக் குறிக்க என்பது போல் மேற்கோள் குறிகளால் அணிசெய்து புனை பெயர் சூடியிருக்கிறார்.

சிலன், குணசிலன் - எப்படிச் சொன்னாலும் தகும். அவருக்கு வயது சுமார் நாற்பதுக்குள்தான் இருக்கும். எனினும் 'அவர்' என்று சொல்லத் தோன்றுகிற நற்பண்பு, இலக்கியத் திறமை, உருவத்திலும் அமைதியும் கம்பீரமும் பொருந்தியவர். மனைவி ஜயா அவருக்கு ஏற்ற ஜோடிதான். நட்பு நிறைந்த பார்வை, மாறாத புன்சிரிப்பு.

அவர்கள் வந்து இரண்டு மாதங்களுக்குள் பூமா நன்றாகப் பழகி ஒன்றி விட்டாள். சிலன் தம்பதியின் உறவினர்களைப் பற்றிக் கூட விசாரித்துத் தெரிந்து கொண்டிருந்தாள். ஜயாவின் மனிதர்களெல்லாம் வட இந்தியாவில் இருக்கிறார்களாம். சிலனின் பெற்றோர் உயிரோடு இல்லை. ஒரே ஒரு தங்கை - தாரிணி - திருமணமாகிக் கணவனோடு பெங்களூரில் வசிக்கிறாளாம். ஒருமுறை அவள் சென்னைக்கு வந்திருந்த போது, பூமா அவளைச் சிலனின் வீட்டில் பார்த்திருக்கிறாள். ஐந்தரை அடிக்குக் குறையாத உயரம். அறிவுத் திட்சண்ய முகம். வெட வெடவென்ற ஒல்லியான உடல். அந்த உடலை அப்படியே பின்பக்கமாய் இழுத்துத் தள்ளி விடுமோ என்று நினைக்க வைப்பதாய் முதுகில் புரளும் கனமான, நீண்ட சாட்டைப் பின்னல்.

பூமாவின் கணவன் சுரேஷ் அவ்வப்போது "பக்கத்து வீட்டு ஆசாமி தன்னைப் பெரிய மன்மதன்னு நினைச்சுக்கிட்டுக் கிருதா வச்சிருக்காரோ?" "என்னமோ நீதான் மெச்சிக்கிறியே தவிர அப்படி ஒண்ணும் அவர் பேச்சில் புத்திசாலித்தனத்தைக் காணோமே!" என்பது போல் ஏதாவது சொல்லிக் கொண்டிருப்பான்.

பூமாவுக்குச் சிரிப்பு வரும். புத்திசாலி இல்லையாம்! சிலனின் எழுத்து எதையாவது படித்திருந்தாலல்லவா அந்த அறிவின் வீச்சு புரியும்! அவளுக்குப் புரிந்திருந்தது. விஷய ஞானம், கொள்கை உறுதி, தென்றலாய்க் குளிர்ந்து சாட்டையாய் விறும் நடை, உணர்வுகளை உட்புகுந்து படம்பிடிக்கும் சூட்சுமம், உயிருள்ள கதாபாத்திரங்கள், அதிலும் பெண் பாத்திரங்களை மதிப்புடனும் புரிந்து கொள்ளலுடனும் படைக்கும் பாங்கு.

ஆணாதிக்கக் கொடுமைகளுக்குப் பலியாகும் பெண், அதை எதிர்க்கும் அவள் புரட்சி விழிப்பு, போராட்டங்கள், சில சமய வெற்றிகள் சில சமயத் தோல்விகள், தோல்வியிலும் தலைநிமிரும் அவளுடைய தன்மான உணர்வு - புதுமைப் பெண்ணின் வெவ்வேறு முகங்கள். அவை அனைத்தும் உண்டு அவர் எழுத்தில். பெண்ணின் சுதந்திரத்தை உணர்விக்கும் பணியில் பல பெண் எழுத்தாளர்களுக்கும் ஒரு படி மேலாகவே முன்னணியில் நின்றார் சிலன்.

பூமாவுக்குக் கதை படிப்பதில் எப்போதுமே ஆர்வமுண்டு. சிறுமிப் பருவத்தில் வெறும் கதைக்காகப் படித்து வந்தவளுக்கு விவரம் தெரியும் வயதாக ஆக, பெண்ணுக்கு நியாயம் வழங்கப்படும் கதைகளைப் படிக்க நேர்கையில் தனிப்பட்ட திருப்தி தோன்றலாயிற்று. தன்னுள் ஒரு பெண்ணியல்வாதி ஒளிந்திருப்பதை அவள் ஆச்சரியத்தோடு உணர்ந்தாள். ஒருவேளை ஒவ்வொரு பெண்ணினுள்ளும் ஒரு பெண்ணியல்வாதி இருப்பதாய் இருக்கலாம். மனித குலத்தின் ஒட்டுமொத்த ஆழ் பிரக்ஞையில் சில ஆதி நினைவுகள் பதுங்கியிருப்பதாய் மனத் தத்துவக்காரர்கள் சொல்வது போல், பெண்ணினத்தின் அடி மன ஆழங்களில் குகை மனிதன் பெண்ணின் தலைமுடி பற்றி இழுத்துப் போவது போல் ஒரு பிம்பம் பதுங்கியிருக்கலாம்...

இந்தச் 'சிலன்' பெண்ணினத்துக்காகப் பேசுபவர். அவர் எழுத்து வெளியாகும் சஞ்சிகை ஒன்று விடாமல் வாங்கிப் படிப்பது பூமாவுக்கு வழக்கமாயிற்று.

"என்ன, சிலன் கதை படிச்சிட்டிருக்கியாக்கும்? எழுந்து போய் எனக்குக் காப்பி கொண்டா" என்பான் சுரேஷ்.

பத்திரிகைக்கு மேலிருந்து இரு கண்கள் அவனை ஊடுருவும். "இப்போ அரை மணி முந்தித்தானே குடிச்சீங்க?"

**ஆர். சூடாமணி**

''ஏன், லீவு நாளில் இன்னொரு டோஸ் காப்பி நான் குடிக்கக் கூடாதா? எழுந்திருக்க மனசில்லையாக்கும் சிலன் கதையை விட்டுட்டு?''

''நீங்கதானே காப்பியைக் குறைக்கப் போறதாய்ச் சொன்னீங்க?''

''ஆமாம், அப்போ சொன்னேன். இப்போ வேணுங்கறேன். என் இஷ்டம். உன் சிலன் மட்டும் காப்பி குடிக்காமத்தான் கதை எழுதறாரா?''

'' 'என்' சிலன் என்ன? அவர் எனக்கு மாமனா சித்தப்பனா? அவர் ஒரு எழுத்தாளர், நான் அவர் எழுத்தின் விசிறி. அவ்வளவுதான்.''

''ஸாரி டியர், கோச்சுக்காதே. எனக்குத் தாகம் தாங்க முடியலே. உடனே போய்க் கொஞ்சம் காப்பி கலந்து கொண்டாயேன், ப்ளீஸ்!'' என்று அவன் புன்னகை செய்வான்.

அவள், பத்திரிகையை மூடி மேஜை மேல் வைத்து விட்டு எழுந்திருப்பாள். ஒரு சமயம் அப்படி அவள் எழுந்து அறையை விட்டு முழுவதுமாய் மறைவதற்குள்ளாகவே அவன் பத்திரிகையை எடுத்து ஆத்திரமாய்த் தரையில் அடித்து விட்டெறிவது தெரிந்தது.

பொறாமைக்குப் பல முகங்கள் உண்டா? இது சிரித்து 'டியர்' சொல்லும் பொறாமை... குகை மனிதன் ஆடையையும் அரங்கையும் மட்டும்தான் மாற்றியிருக்கிறான் போலும்.

அன்று அவளுக்கு ஒரு பெரிய ஆச்சரியம்.

தபால்காரன் புது ஆளாய் இருக்க வேண்டும். அவர்களுக்கு வந்த கடிதங்களோடு சிலன் பெயரிட்ட ஒரு நீள உறையையும் சேர்த்துப் போட்டு விட்டுப் போய் விட்டான். எல்லாவற்றையும் பொறுக்கி எடுத்த பூமா, அந்த உறையைப் பார்த்துத் திகைத்தாள்.

சரியாய் ஒட்டப்படாத உறை. கீழே விழுந்த உலுக்கலால் பாதிக்கு மேல் திறந்திருந்தது. உள்ளேயிருந்து வெள்ளைத் தாள்கள் தெரிந்தன. ஏதேனும் கையெழுத்துப் பிரதியா? ஒருகணம் வியப்பு எழுந்தது. பத்திரிகைகள் சிலன் எழுத்தைக் கூடத் திருப்பி அனுப்புமா என்ன?

பிறகுதான் அனுப்புநர் பகு



தியைக் கவனித்தாள். எஸ். ஏ. தாரிணி, ராஜாஜி நகர், பெங்களூர்.

சிலன் தங்கையா? எஸ். ஏ. என்று அவருடைய முதலெழுத்துக்களேதான். கல்யாணத்துக்குப் பிறகும் பெயர்ப் பாணியை மாற்றிக் கொள்ளவில்லை போலிருக்கிறது. பரவாயில்லை, தனித்துவம் உள்ளவள் தான்.

ஓர் உத்வேகத்தில் பூமா உறையை மெல்ல முழுவதுமாய்த் திறந்து தாள்களை வெளியே எடுத்தாள்.

சிறுகதை போல் இருந்தது. ''பெண்மைக் கனல்'' என்று தலைப்பு. பத்துப் பக்கங்கள்.

பூமா கதையைப் படித்தாள்.

சிறிது நேரம் என்ன நினைப்பதென்றே தெரியவில்லை. தாரிணியும் கதை எழுதுவாள் என்பது புதுச் செய்தி. குடும்பத்திலேயே இலக்கிய ரத்தம் ஓடுகிறாப் போல் இருக்கிறது. கதை ஆழமாக, ஆற்றல் வாய்ந்ததாகத்தான் இருந்தது. அந்த ஒல்லிப் பெண்ணுக்குள் இத்தனை வலிமை இருக்கிறதென்று யாரும் ஊகிக்க முடியாது. ஆனால், ஏன் சகோதரனின் பாணியையே பின்பற்றுகிறாள்? அவருடையதே நடை, உத்தி, பார்வை... என்னதான் அண்ணன் ஓர் உந்துசக்தியாய் இருந்தாலும் இப்படி அச்சாக நகல் எடுப்பதில் என்ன சிறப்பு இருக்கிறது? சுயத்தன்மை இல்லாத கலை, படைப்பாளிக்கு என்ன பெருமை சேர்க்க முடியும்?

உறையைக் கவனமாய் ஒட்டிப் பக்கத்து வீட்டின் வெளி 'கேட்'டில் பொருத்தியிருந்த கடிதப் பெட்டிக்குள் போட்டு விட்டு வந்தாள். அடுத்து வந்த நாட்களில் அக்கதையைப் பற்றிச் சிலனிடமோ ஜயாவிடமோ பேச நினைத்த எழுச்சியை அடக்கிக் கொண்டாள். தாரிணி சமீபத்தில் தான் கதை எழுதத் தொடங்கியிருக்கலாம். அண்ணனின் விமர்சனத்துக்காகத் தன் கதையை அனுப்பியிருக்கலாம். மூன்றாம் மனுஷியான தான் அதைப் பற்றித் தெரிந்ததாய்க் காட்டிக் கொள்வது நாகரிகமல்ல.

**நா**ன்கு வாரங்களில் தான் ரசிக்கும் இலக்கியப் பத்திரிகையை ஆவலாய்ப் பிரித்துப் புரட்டிய போது அதிர்ந்து போனாள்.

சிறுகதை : ''பெண்மைக் கனல்''.

எழுதியவர் : ''சிலன்''.

அவசரமாய்ப் படித்தாள். அதே கதை.

அவள் அபிமான எழுத்தாளர்...! தங்கையின் படைப்பைத் திருடி... சீசீ... ஆனால்... அதுதானா உண்மை? பின்னே? இதற்கு என்ன அர்த்தம்? அர்த்தங்களின் பின்வே அர்த்தங்களாய் ஒரு குழப்பம்...

மண்டை வெடித்து விடும் போல் இருந்தது. இனியும் பொறுக்க முடியாது என்றான போது, மாலையில் அடுத்த வீட்டுக்குச் சென்றாள். நல்ல வேளை, சுரேஷ் அன்று மாலை ஒரு நண்பனைப் பார்த்து விட்டு இரவு எட்டு மணிக்குத்தான் வீடு திரும்பப் போவதாய்ச் சொல்லியிருந்தான். இல்லாவிட்டால் அவனுக்கு டிபன் காப்பி கொடுக்காமல் எங்கேயும் - குறிப்பாய் சிலன் வீட்டுக்கு - போய் விட முடியாது.

சிலன் அலுவலகத்திலிருந்து வீடு திரும்பியிருந்தார். அவரும் ஜயாவும் ஹாலில்தான் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுடைய ஏழு வயதுப் பையன் பக்கத்து அறையில் வீட்டுப் பாடம் செய்து கொண்டிருந்தான்.

அவளைக் கண்டதும் சிலன் எழுந்து நின்று ''வாங்க'' என்று அழைத்து அவள் உட்கார்ந்த பின் மீண்டும் உட்கார்ந்து கொண்டார்.

மேஜை மேல் அந்தப் பத்திரிகை இருந்தது. பூமா மௌனமாக அதை எடுத்துச் சுருட்டுவதும் பிரிப்பதுமாக இருந்தாள். உடனடியாய் எதுவும் பேச முடியவில்லை. அவர் முகத்தை நிமிர்ந்து பார்க்கவும் இயலவில்லை.

கடைசியில் அவரே ''என்ன, கதையைப் படிச்சீங்களா?'' என்றார்.

''ம்.''

''அதைப் பத்திப் பேசத்தான் வந்திருக்கீங்க போல் இருக்கு?''

அவள் மௌனமாய் இருந்தாள்.

''ஏன், கதை பிடிக்கலையா?'' என்று இப்போது ஜயா கேட்டாள்.

''இந்தக்கதை...'' வெடுக்கென்று தலை நிமிர்ந்த பூமா, சிலனை நேராகப் பார்த்தாள். தீவிரமான தொனியில் சொற்கள் வேகமாய் வெளிவந்தன:

''நாலு வாரத்துக்கு முந்தி உங்களுக்கு வந்த இந்தக் கதையின் கையெழுத்துப் பிரதியை உறையோடு தபால்காரர் முதல்ல தவறுதலாய் எங்க வீட்ல கொண்டு வந்து போட்டுட்டார். நான்தான் அப்புறம் உங்க லெட்டர் பாக்ஸில் போட்டேன் - கதையைப் படிச்ச பிறகு.''

அறையில் நிசப்தம் சூழ்ந்தது. அவர் அலண்டு போய் ஏதேனும் விளக்கம் சொல்ல முற்படுவார் என்று எதிர்பார்த்த பூமா அந்த மௌனத்தால் ஆத்திரமடைந்து ''இதென்ன இப்படி ஒரு காரியம் செய்துட்டீங்க மிஸ்டர் குணசிலன்?'' என்றாள்.

''எப்படி ஒரு காரியம்?''

''உங்க தங்கை கதையை... என்னதான் அவங்க இப்பத்தான் எழுதத் தொடங்கறாங்கன்னாக் கூட.... இப்படி உபயோகப்

## ஃபிரிஜ் பரிசு : கூப்பன் நெ : 20

" 'நேற்று வரை நந்தவனம்' தொடர்கதையில் இப்படி ஒரு தவறு செய்து விட்டீர்களே?" என்று சிலர் கடிதம் எழுதுகிறார்கள். இந்தக் கூப்பனில் அல்லவா எழுதி பத்திரப்படுத்த வேண்டும்? வாரா வாரம் அந்தத் தொடரில் நாங்கள் வேண்டுமென்றே செய்து வரும் ஒரு தவறைக் கண்டு பிடித்துக் கூப்பனில் எழுதி, சேகரித்துக் கதை முடியும் வாரம் 5-10 வரி விமர்சனத்துடன் அனுப்பி வைத்தால், மிக அதிகமான தவறுகளைச் சரியாகக் கண்டு பிடித்தவருக்கு ஃபிரிஜ் பரிசு! ஒருவருக்கு மேல் மிக அதிகமான தவறுகளைச் சரியாகச் சுட்டிக் காட்டி இருந்தால் குலுக்கல் முறையில் ஒருவர் தேர்வு செய்யப்படுவார். ஆறுதல் பரிசுகளும் உண்டு. இந்த வாரம் வேண்டுமென்றே செய்யப்பட்ட......

தவறு : ____________________ திருத்தம் : ____________________

படுத்திக்கலாமா? உங்களுக்கு அழகா இது? உங்க திறமை என்ன, இலக்கிய உலகத்தில் உங்க இடம் என்ன..."

"அவள் திறமை, இலக்கிய உலகத்தில் அவள் இடம்."

பூமா புரியாமல் பார்த்தாள்.

"நீங்க ஓர் உண்மையான இலக்கிய ரசிகை மிஸஸ் சுரேஷ். இந்த விஷயத்தை இவ்வளவு தீவிரமாய் நீங்க ஃபீல் பண்றதால உண்மையை உங்ககிட்ட சொல்றேன். மன சோட வச்சிக்குங்க. தாரிணியின் இந்த ஒரு கதை மட்டுமே என் பெயரில் வரல்லே. என் பெயரில் வரும் எல்லாக் கதைகளுமே அவள் எழுதறதுதான்."

பூமா உறைந்து போனாள் சில கணங்கள். அறையின் நிசப்தத்தில் அடுத்த அறையில் பாடம் எழுதும் பையன் பக்கத்தைத் திருப்பும் ஒலி தெளிவாய்க் கேட்டது.

"ஆனா... ஏன்? இதென்ன, ஜார்ஜ் எலியட் காலமா? ப்ரான்ட்டே சகோதரிகள் மாதிரி ஆண்பாற் பெயர்கள் வச்சுக்க வேண்டிய நிர்ப்பந்தமா? பெண்கள் கதை எழுதறது சகஜமாய்ட்ட இந்த நாளில்.. இன்னும் சொல்லப் போனா ஆண்களே பெண் பெயரில் கதை எழுதற இந்த நாளில்..."

"நம்ம இந்தியச்சமுதாயத்தில் ஆண்கள் மனம் எந்த அளவுக்கு விரிவு அடைஞ்சிருக்கு மிஸஸ் சுரேஷ்? கணவனோடு அவன் வீட்டில் குடித்தனம் நடத்தற ஒரு பெண், ஆணாதிக்கத்தை எதிர்த்தும் பெண்ணின் புரட்சியை வலியுறுத்தியும் கதை எழுதிட்டு, அப்புறம் அந்த வீட்டில் தொடர்ந்து வாழ்ந்துட முடியுமா?"

அவள் பதிலற்றுப் போனாள்.

"தாரிணியின் புருஷன் ஒரு கொடுமைக் காரன். ஆனா அவனைப் பிரிஞ்சு வருகிற துணிவு அவளுக்கு இல்லை. அதுக்காக ஆயுசுக்கும் சித்திரவதையை வாய் திறக்காமலே பொறுத்துக்கிட்டுப் போனா நெஞ்சு வெடிச்சுடாதா? ஆகவேதான் அவள் தன் உணர்ச்சிகளையும் ஆவேசங்களையும் எழுத்தில் கொட்டறா. அதையெல்லாம் என் பெயரில் பிரசுரத்துக்கு அனுப்ப முடியுமான்னு அவள் கேட்ட போது என் தங்கைக்குச் செய்யும் உதவியாய் நினைச்சு ஒத்துக்கிட்டேன். இப்போ அவளுக்கு ஒரு வடிகால் கிடைக்குது. நாலு பேர்கிட்டே மனசு திறந்து பேசற மாதிரி ஓர் உணர்ச்சி கிடைக்குது. கதைகளுக்குச் சன்மானம் வரப்போ நான் வாங்கிப் பிறகு அவள் கிட்டே சேர்த்துடறேன். இந்தக் கதைகளை நான் எழுதறதாய் நினைச்சே அவள் புருஷன் அவளை ஏசறானாம், 'உன் அண்ணன் என்னைத்தான் மனசில் வச்சுக்கிட்டு இந்த மாதிரி எழுதறானா' அப்படின்னு. இதெல்லாம் அவளே எழுதறான்னு தெரிஞ்சா என்னதான் செய்வானோ!"

பூமா வெகுநேரம் தலைநிமிரவில்லை. ஆண் மன விரிவு... அது இவ்வளவு அரிய பொருளா? இதன் ஒரு லேசான முகத்தைத் தன் வீட்டிலேயே கண்டிருக்கிறாள் என்றாலும்...

நல்ல வேளை, எல்லா ஆண்களும் ஒரே மாதிரியாக இல்லை. இருள் வானில் இடை இடையே நட்சத்திரமும் இருக்கிறது - மானிடப் பண்புகளும் மனைவியிடம் நேசமும் சகோதரியிடம் அனுதாபமுமாய் வாழும் இந்தச் சிவனைப் போல்.

பாவம், தாரிணி. எதிர்ப்பைக் கூட மூடி மறைத்துச் செய்ய வேண்டிய பரிதாபம். அந்த உயரம், ஒல்லி உடம்பு, இடுப்புக்குக் கீழே தொங்கும் பின்னல் ஜடை... பற்றி இழுக்க வாகான நீண்ட முடி என்று அசம்பாவிதமாக ஓர் எண்ணம் அவளுள் மின்னி மறைந்தது.

# சிவராசன் அதி புத்திசாலியா?



● அதிபுத்திசாலி?

● ந. செல்லபாண்டி, சென்னை – 30.

? குமுதம், தராசு வாரப் பத்திரிகைகள் தாக்கப்பட்டது பற்றி...?

! சகிப்புத் தன்மை குறைந்து கொண்டே வருவதை எடுத்துக் காட்டுகிறது. அவதூறு எழுதப்படக் கூடாதுதான். ஆனால் கருத்து விமர்சனத்தைக் கூடத் தாங்கிக் கொள்ள முடியாத நிலையைக் காண்கிறோம். சுதந்திர ஜனநாயக நாட்டில் இது விசனத்துக்குரியது. பத்திரிகைகள் அத்துமீறி நடந்தால் பிரஸ் கவுன்ஸில் இருக்கிறது; நீதிமன்றமும் இருக்கிறது. போதாக்குறைக்கு மாற்றுக் கருத்தை எடுத்துரைக்கக் கட்சிப் பத்திரிகைகளும் உள்ளன. ஆக, குண்டாந்தடியும் கத்தி - துப்பாக்கியும் எதற்கு?

● எம். செல்லையா, சாத்தூர்.

? சித்தாரா – ரகுமான் பிரச்னை எப்போது ஓயும்?

! குறிப்பிட்ட பத்திரிகைகள் 'போதும்' என்று நினைக்கும் போது!



● வல்லவனுக்கு வல்லவன்!



● ...பிரமாத எச்சரிக்கை!

● திருமதி. நெ. மணிமேகலை, வேங்கை வாசல்.

? கடவுளின் முகவரி என்ன?

! இதென்ன, ஆட்டைத் தோளில் போட்டுக் கொண்டு ஊர் முழுக்க அலைந்த கதையாக...? ''மே/பா. நமது உள்ளம்'' என்பதே முகவரி.

● ப. விஜயபாலன், சென்னை.

? எட்டாவது திருமணம் செய்து கொண்டிருக்கிறாராமே, டெய்லர்?

! பெயருக்கேற்ப பழசை 'கட்' பண்ணி விட்டு புதுசு புதுசாய்த் தைத்துக் கொள்கிறார். ஒன்பது, பத்துக்கெல்லாம் கூட இன்னும் அவகாசம் இருக்கிறது!

● க. கே. சீனிவாசன், வைப்பூர்.

? எம். பி. ஏ., எம். பி. பி. எஸ். போன்று படித்து விட்டுச் சினிமாவில் நுழைபவர்கள் பற்றி?

! அதுதாண்டா சினிமா!

● முஸ்தபா கமால், தக்கோலம்.

? ஒரு சின்ன ஓட்டை பெரிய கப்பலையே கவிழ்க்கும் – உதாரணம்?

! இந்தியன் ஏர்லைன்ஸ் விமானம் இம்பால் அருகே விழுந்து நொறுங்கி, 69 பேரைப் பலிவாங்கியதே, அதைவிடவா? பொதுவாக, உலகின் பல இடங்களிலும் விமான விபத்துக்கள் நிகழவே செய்கின்றன; இல்லை என்று சொல்லவில்லை. ஆனால் விமானப் பராமரிப்புப் போதாத காரணத்தாலும் பைலட்டுகளுக்குப் போதிய அளவு பயிற்சி அளிக்கப்படாததாலும் விபத்துக்கள் அதிகம் நிகழ்வது நம் நாட்டில்தான். விமானத்தில் ஏறி வானில் மிதக்க, மிதப்புடன் போகக் கூடாது என்பதிலும் கண்டிப்பாக இருக்க வேண்டும்.

● ஆர். முரளி, சென்னை – 15.

? அண்மையில் நீங்கள் விரும்பி ரசித்த ஸ்டண்ட் ஒன்றைக் கூறுங்களேன்?

! கார்பசேவ் கவிழ்க்கப்பட்டது குறித்து நமது பிரதமர் பிரமாதமான எச்சரிக்கை ஒன்று விடுத்தாரே, அதுதான்! என்ன சொன்னார் கேளுங்கள்: ''கார்பசேவ் பதவி நீக்கம், பரபரப்பாகப் பல மாறுதல்களைக் கொண்டு வரும் தலைவர்கள் எல்லோருக்குமே ஓர் எச்சரிக்கை!'' என்றார். அப்புறம் என்ன நினைத்துக் கொண்டாரோ – தம்மையே எண்ணிப் பார்த்தாரோ என்னவோ - ''மாறுதல்கள் செய்யாமல் சும்மா இருப்பவர்களுக்கும் ஓர் எச்சரிக்கை!'' என்று ஒரு போடு போட்டார். குழப்பத்திலிருந்து நான் இன்னும் மீளவில்லை. நீங்கள்?





◆ பழிவாங்கப்படுகிறாரா?

● எல். ஆர். விஜயகுமார், சென்னை.

? சிவராசன் அதிபுத்திசாலியா?

! நிச்சயமாக. இல்லாமலா அவனைப் பிடிக்கத் தொண்ணூறு நாட்கள் ஆகியிருக் கின்றன! ராஜீவை அவன் கொன்றது மகா கொடூரம் என்றாலும், அதை அவன் எத்தனை ரகசியத் திட்டங்கள் போட்டு, எவ்வளவு அறிவாற்றலுடன், சாமர்த்திய மாக நிறைவேற்றியிருக்கிறான் என்று பார்த் தால் மரியாதை ஏற்படவே செய்யும். இதைத் தான் ஆங்கிலத்தில், "Give the Devil its due" என்பர். ஆனால் 'வல்லவனுக்கு வல்லவன் உண்டு' என்பதற்கேற்பவும் 'கெடுவான் கேடு நினைப்பான்' என்பதற்கேற்பவும் சிவராசனை ஒழிக்க ஒரு கார்த்திகேயன் வந்தார். ராஜீவின் பிறந்த நாள் தாண்டாமல் அந்த தினத்திலேயே சிவராசனுக்கு ஒரு முடிவு ஏற்பட்டது விந்தையான ஓர் அம்சம். கார்த்திகேயனுடன் ஒத்துழைத்த அனைவ ருக்கும் வாழ்த்துச் சொல்லும் போது, 'சிவராசனை உயிரோடு பிடிக்கவில்லையே' என்று குறை கூறுகிறவர்களைக் குறை கூற வும் வேண்டியிருக்கிறது. இவர்கள் புலி களைப் பற்றிச் சரியாக அறியாதவர்க ளாகத்தான் இருக்க முடியும். புலிகளை அறிந்தவர்கள், சிவராசன் - சுபா உயிருடன் பிடிபடுவார்கள் என்று எப்போதுமே நம்பி யது இல்லை.

● ஆர். ஸ்ரீதரன், குடந்தை.

? நக்கீரன் ஆசிரியர், பதிப்பாளர்களை தமிழக அரசு கைது செய்தது பற்றி...?

! தவறான அணுகுமுறை. டெலிஃபோன் ஒட்டுக் கேட்பது பற்றி முதல்வரைச் சம்பந் தப்படுத்தி அப் பத்திரிகை எழுதியது குற்றமே என்றாலும் ஒரு மறுப்புக் கடிதம் எழுதி, மறு இதழில் பிரசுரிக்குமாறும் வருத்தம் தெரிவிக்குமாறும் கேட்டிருக்க லாம். அதுவே போதிய அளவு தலைகுனி வாகும்; எச்சரிக்கையாகவும் விளங்கும். அதை விட்டு விட்டுக் கைது செய்து, சிறை யில் அடைத்து, அரசை எதிர்த்துப் போஸ்டர் ஒட்ட வழி வகுத்து... பத்திரிகைக்குத் தமிழக அரசு ஏகப்பட்ட இலவச பப்ளிசிடி வழங் கியது.

● ஐ. எஸ். வாசு, மாடம்பிள்ளைதர்மம்.

? நாகராஜன் பழிவாங்கப்படுகிறாரா? அல்லது தண்டனைக்கு உரியவர்தானா?

! தராசு பத்திரிகைக் காரியாலயத்தில் நடந்த படுகொலையில் அவருக்குச் சம்பந்தம் இருப்பதாக வாக்குமூலங்கள் தங்களிடம் இருப்பதாக போலீஸ் கூறுகிறது. வாக்கு மூலங்கள் போதாது. சாட்சியங்கள் தேவை. தாம் நிரபராதி என்று கூறும் நாகராஜன், போலீஸில் சரணடைந்ததில் புத்திசாலி. இனி போலீஸ் எப்படி வழக்கை நடத்து கிறது என்பதை வைத்தும் நீதிமன்றம் என்ன தீர்ப்பு வழங்குகிறது என்பதைப் பொருத் தும்தான் நாகராஜன் குற்றவாளியா அல்லது பழிவாங்கப்பட்டாரா என்பதை நிர்ணயிக்க முடியும்.

● எஸ். வி. ரவிகணேஷ், கும்பகோணம்.

? பத்திரிகைக்குத் தேவைப்படும் காகி தத்தை இந்தியாவில் தயாரிக்கிறார்களா? வெளிநாட்டிலிருந்து வருகிறதா? விளக்கம் தேவை.

! வெளிநாட்டிலிருந்துதான் முழுதும் வந்து கொண்டிருந்தது.. சமீபத்தில்தான் உள் நாட்டிலும் தயாரிக்க ஆரம்பித்திருக்கி றார்கள். இந்தக் காகித ஆலைகளில் சில, பத்திரிகைக் காகிதக் கூழை மட்டும் இறக்கு மதி செய்து, இங்கு காகிதமாக உருமாற்று கின்றன. பெரிய பத்திரிகைகள் பெருமள வுக்கு உள்நாட்டுக் காகிதத்தையே பயன் படுத்த வேண்டும் என்ற அரசு ஆணை உள்ளது. விலை உயர்வில் இரண்டுமே ஒன்றுடன் ஒன்று போட்டியிடுகின்றன!

● ஆர். அய்யா குட்டி, நெல்லை.

? பொன் விழா ஆண்டு மலரை 128 பக்கங்கள் அச்சிட்டதில் கல்கிக்கு ஒன்றும் நஷ்டம் வரவில்லையா?

! விளம்பரங்கள் கைகொடுத்தன.

◆ பிரச்னை...



◆ ...ஓயுமா?



★ ரூ. 25 பரிசு பெறுபவர் :
பி. அ. முஸ்தபா கமால்,
140, மசூதி தெரு,
தக்கோலம் - 631 151.

# போராளிகள் வசம் பிணைக் கைதிகள்

சொன்னது: மோகன்தாஸ்
எழுதியவர்: மௌஷ்மி
படம்: செல்லம்




கமாண்டோ இன்ஸ்பெக்டருடன் ஆலோசனை...
விடுதலை கோரப்படும் போராளிகள் பட்டியல் இது...
நம்மிடம் உள்ள போராளிகள் பற்றிய தகவல்கள் அடங்கிய ஃபைல்கள்...
இரவெல்லாம் ஃபைல்களை அலசியதில்...
இவர்கள் ஈ.பி.ஆர்.எல்.எஃப். குழுவினர் தான்... விவரம் இதோ இருக்கிறது
சென்னையில் ஈ.பி.ஆர்.எல்.எஃப் முக்கியஸ்தர்கள் யார் இருக்கிறார்கள்? கண்டு பிடியுங்கள்.
எஸ், ஸார்!
இரு தினங்களுக்குப் பிறகு...
சுரேஷ் என்ற இளைஞனை விசாரித்ததில் ஒரு ஃபோன் நம்பர் கிடைத்தது...
ஃபோன் நெம்பரை வைத்து விலாசம் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.
அந்த விலாசத்துக்கு விரைந்தனர்



வீட்டைப் போலீஸ் சூழ்ந்து கொள்ள, கதவைத் தட்டி...
யாரு?
ஹேண்ட்ஸ் அப், டக்ளஸ்!
வீட்டைச் சோதித்த போது...
டக்ளஸ் தேவானந்தா, பத்மநாபா, வரதராஜ பெருமாள்... குட்...
என்ன வேணும்
அவர்கள் டி.ஐ.ஜி.யிடம் கொண்டு வரப்பட...
உங்க ஆளுங்க யாழ்ப்பாணத்தில் அலன் தம்பதியைக் கடத்தியிருக்காங்க...
எங்களுக்கு ஒன்றும் தெரியாது...
நீங்க உதவலேன்னா, ஆலன் தம்பதிக்கு நேரும் கதிதான் உங்களுக்கும்! ஜாக்கிரதை! தங்கம் கிடையாது; போராளிகளை விடுவிக்கவும் முடியாது! என்ன சொல்றீங்க?
அவர்கள் ஒத்துழைக்கத் தீர்மானித்து...
ஹல்லோ... யாழ்ப்பாணமா... இரண்டு நோயாளிகளையும் ஆஸ்பத்திரியிலிருந்து டிஸ்சார்ஜ் செய்துடுங்க!
மறுநாள் அமெரிக்க தூதரக அதிகாரி...
ஆலன் தம்பதி விடுவிக்கப்பட்டு விட்டனர். தேங்க்யூ மோகன்தாஸ்
யூ ஆர் வெல்கம்!

# வட்டமேஜை

● காங்கிரசாரின் சிறுபிள்ளைத்தனமான கோஷ்டிப் பூசல் பற்றிய கார்ட்டூன் மிகவும் ரசிக்கும்படி இருந்தது!
அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

● மூன்றாவது பரிசுக் கதைகளில் ஒன்றான 'முதல் தேதி', மத்தியதர வர்க்கத்தினரின் நிலைமையைப் படம் பிடித்துக் காட்டுவது போல், அத்தனை தத்ரூபமாக இருந்தது! கதாநாயகி, கௌரியைப் போல் ஒவ்வொரு குடும்பத் தலைவியும் கணவன் நிலைமையை உணர்ந்து கொண்டால், அதுவே, குடும்பத்தின் மாபெரும் வரப்பிரசாதமாகும்!
பெங்களூர் - 10, என். கே. ஈசுவரி.

● அமரம் படத்தின் விமர்சனம் ஒருபுறம் இருக்கட்டும்; மம்முட்டியின் அந்த ஒரு பக்கப் படமே போதும்!
சேலம், எம். கே. சக்திவேல்.

● ஆண்களுக்கு சமமாக இன்று எல்லாத் துறைகளிலும் முன்னேற நினைக்கும் பெண்கள் அனைவரும் தவறாமல் படித்துப் பயன்பெற வேண்டிய கட்டுரை 'முன்னேற்றப் பாதையில் பெண் சுதந்திரம்.'
கும்பகோணம், எஸ். கே. மூர்த்தி.

● 'நிழலுக்குப் பின் நிஜங்கள்' மூலம் திரையுலகை ஒரு கனவுலகமாகக் காணும் என் போன்ற பட்டாம்பூச்சிகளுக்குத் திரையுலகம் ஒரு நிலக்கரிச் சுரங்கத்திற்கு ஒப்பானது என்பதைத் தெளிவாகப் படம் பிடித்து காட்டிய விகடனுக்கு எனது பாராட்டுக்கள்!
காரைக்கால், ஆர். எஸ். இராஜ்.

● 'நிழலுக்குப் பின் நிஜங்கள்' கட்டுரை முடிந்து விட்டதே என்று உள்ளது! ஒவ்வொரு வாரக் கட்டுரையும் சிந்திக்கத் தூண்டின என்றால் அது மிகையல்ல.
திருச்சி, வி.இரா. இருத்திகா.

**அரசு எப்படிச் சமாளிக்கப் போகிறதோ?**

● விக தமது தொடரின் மூலம் அவரது சுயதரிசனத்தையே காட்டி இருக்கிறார்.
சென்னை - 5, சரளா சங்கர சுப்பிரமணியன்.

● கடத்திச் செல்லப்பட்ட அதிகாரி துரைசாமியைப் பற்றிப் பல பத்திரிகைகளில் செய்திகள் வந்திருந்தாலும் அவர் வீட்டுக்கு நேரில் சென்று, அவர் மனைவியைப் பேட்டி கண்டு எழுதிய முதல் தமிழ்ப் பத்திரிகை கல்கிதான்!
திருச்சி - 8, எச். ஷகிலாபேகம்.

● ''லட்சியக் கணவர்'' கட்டுரைகள் இரண்டும் மிக மிக அருமை. லட்சியக் கணவராயினும் சரி, லட்சிய மனைவியாயினும் சரி, இரண்டே குணங்கள் போதுமானவை. ஒன்று மனித நேயம்; இரண்டாவது விட்டுக் கொடுத்தல். இவை இரண்டும் இருவரிடமும் இருக்குமானால் வேறு ஏது இருந்தால் என்ன! இல்லாவிட்டால்தான் என்ன!
புவனகிரி, ச. அருட்செல்வன்.

● ஜெயலலிதாவின் அரவணைப்பில் சந்தர்ப்பவாத அரசியல் நடத்திக் கொண்டிருக்கும் வாழப்பாடி போன்றவர்களுக்குத் தமிழகத்தில் காங்கிரஸ் தலை எடுத்தால் என்ன, எடுக்கா விட்டால் என்ன? அவர்தான் எப்போதோ தமிழக காங்கிரஸின் முதுகெலும்பை ஒடித்துத் 'தலைவி'யிடம் அடகு வைத்து விட்டாரே!
புதுடெல்லி - 91, ஆர். ஹரிகோபி.

● ஒன்றுமேயில்லாத பிரச்னைகளை எல்லாம் வளர விட்டு நாம் படும் அவதியைத் தலையங்கம் தெளிவாக உணர்த்தியது! ஆயுதக் கலாசாரத்தின் விசுவரூபத்தை அரசாங்கம் எப்படிச் சமாளிக்கப் போகிறதோ, தெரியவில்லை!
சிதம்பரம், ரா. கருணாகரன்.

● மற்ற நாடுகளுக்கு முன்பு, நமது பாரதம் தலை நிமிர்ந்து நிற்க, ஒவ்வொரு குடிமகனும் குறிப்பாக இளைஞர்கள் திட்டவட்டமான லட்சியங்களைக் கொண்டு சாதனைகள் படைக்க வேண்டும். தாம் உலகம் போற்றும் விஞ்ஞானியாக மலர தமது வருங்கால மனைவி ஆத்ம பலம் தர வேண்டும் என்கிறார் மாணவர் மு. செந்தில். அவரது எண்ணப்படியே ஏற்ற மனைவியைப் பெற்று, தாம் படிக்கும் கம்ப்யூட்டர் விஞ்ஞானத்தில் உலக சாதனை படைக்க வாழ்த்தி, ஊக்கப் பரிசாக ரூ 25 ஐ கல்கி மூலம் அளிக்கிறேன்.
அம்பர்நாத், டாக்டர். ஜி. மாரிமுத்து.

**(டாக்டர். ஜி. மாரிமுத்து நமக்கு அனுப்பியிருந்த ரூ.25 ஐ மணியார்டர் மூலம் மாணவர் மு. செந்திலுக்கு அனுப்பி வைத்துள்ளோம் - ஆர்.)**

● லக்ஷ்மிகாந்தனின், ''போதும் இந்தத் தண்டனை'' சிறுகதையில் விசுவநாதன், பிரபல கம்பெனியில் பணிபுரிவதாக எழுதிய பிறகு, பெண் பார்க்க வரும் போது கீதா, விசுவநாதனை ''எந்த ஸ்கூலில் இருக்கீங்க?'' என்று கேட்கிறாள். சிறுகதையில் இந்தத் தவறும் வாசகர் போட்டிக்காக வைக்கப்பட்டதா? அல்லது விலை ஏற்றத்தால் ஏற்பட்ட தடுமாற்றமா?
கும்பகோணம், பாணாதுறை கே. வி. கே. ஸ்ரீதர்.

# 50 ஆண்டுகளுக்கு முன்...



கல்கி 1.9.41

மேலட்டையில் ஸ்ரீமதி ருக்மணி தேவியின் அபிநயத் தோற்றத்தைத் தாங்கி வெளி வந்துள்ள இந்த இதழின் அட்டைப் பட விளக்கம் :

தமிழ்நாட்டின் பழம் பெருங்கலையான பரத நாட்டியத்துக்கு இந்தக் காலத்தில் புத்துயிர் அளித்து உலகோர் முன்னிலையில் சிறப் புறச் செய்தவர் ஸ்ரீமதி ருக்மணி தேவி. இதற் காக அவர் எடுத்துக் கொண்ட சிரமம் கொஞ்சமல்ல. அந்த அரிய கலைச் செல் வத்தை இந்தக் காலத்தில் அருமையாகப் போற்றி வருகிறவர் யார் என்று தேடி, பந்த நல்லூர் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையைக் கண்டுபிடித்தார் ; அவரையே ஆசிரிய ராகக் கொண்டு முறையாகப் பயின்றார். ஒரு பிராயத்துக்குப் பிறகு பரத நாட்டியக் கலை யைப் பயில முடியாது என்னும் கூற்றைப் பொய்ப்படுத்தினார். ஆசிரியரிடம் கற்ற பழங்கலையைத் தமது அழகுணர்ச்சியினா லும் அறிவுத் திறத்தினாலும் புதுமைக் கலை யாக்கினார். அதனால் தமிழ் நாட்டுக்கே ஒரு பெருஞ் சிறப்பை அளித்து விட்டார் என்று சொல்வது மிகையாகாது.

### குண்டாந்தடி அஹிம்சை!

மகாத்மாவிடம் உண்மையான பக்தி கொண்டவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய மார்க்கம் எது என்பதை ஸ்ரீ விநோபா பாவே தமது செய்கையினால் சுட்டிக் காட்டிக் கொண்டேயிருக்கிறார். நூல் நூற்கிறார்; சத்தி யாக்கிரஹம் செய்கிறார்; சிறைக்குப் போகி றார். சிறையிலிருந்து விடுதலையடைந்து வந்ததும் திரும்பவும் நூல் நூற்கிறார்; சத்தி யாக்கிரஹம் செய்கிறார்; சிறைக்குப் போகி றார். இந்த உயரிய வழியை மகாத்மாவின் உத்தம சீடர்கள் தங்கள் சக்தியானுசாரம் கடைப்பிடிப்பார்கள். இவ்விதம் செய்ய முடியாதவர்கள் தங்களாலியன்ற வரையில் நிர்மாண திட்டங்களை நடத்திக் கொண் டிருப்பார்கள். இப்படியெல்லாம் செய்யா மல் ''யாரடா மகாத்மாவின் அஹிம்சை யைக் குறை சொன்னவன்?'' என்று குண் டாந்தடியைத் தூக்கிக் கொண்டு கிளம்பி, வழியில் போகிறவர்களை வீண் சண்டைக்கு இழுப்பவர்களைப் பற்றி நாம் என்ன சொல்வது?

-- **அஹிம்சையா? அரசியலா? தலை யங்கத்தின் ஒரு பகுதி.**

### கிடைக்கும் அதிகாரத்தைக் கைப்பற்று !

ஒன்பது மாத தண்டனையை அநுப வித்து விட்டு, விடுதலையாகி வந்தார் ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி. தேக நிறையில் பத்து ராத்தல் குறைந்து, பலவீனமாகத் தான் வெளி வந்தார். ஆனால் மனோ தைரியம் மட்டும் அணுவளவும் குறைய வில்லை. விடுதலையான அன்றே தம் மனத்திலுள்ள அபிப்பிராயத்தை அவரை வர வேற்கக் கூடியிருந்த பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் வெளியிட்டார். அந்த அபிப்பிராயம்



புதிதல்ல; அவருடைய வெகு நாளைய பழைய அபிப்பிராயந்தான். அதாவது, கிடைக்கக் கூடிய எல்லா அரசியல் அதி காரத்தையும் காங்கிரஸ் மகா சபை கைப் பற்றிக் கொள்ள வேண்டுமென்பதுதான்.

### லெனின் கிராடைக் காப்பாற்ற...

லெனின் கிராட் நகரைக் காப்பாற்று வதில் லட்சம் லட்சமான சுதந்திரத் துடிப் புள்ள வீரர்கள் யுத்த சந்நதமாய் நிற்கி றார்கள். ''லெனின் கிராட் நகர வாசல் எதிரி களுக்கு நரக வாசலாக வேண்டும்'' என்று ஒவ்வொருவர் உதடுகளும் உச்சரிக்கின்றன. ரஷ்ய-ஜெர்மனி யுத்தத்தில் உலகத்தின் பார்வை முழுதும் லெனின் கிராட் மீது விழுந்திருப்பதை உணர்ந்து, எதிரியை நெருங்க விடாமல் தடுக்க கொரில்லாப் படைகள் முன்னைக் காட்டிலும் இப்பொ ழுது அதிக உபத்திரவம் கொடுத்து வரு கின்றன. லெனின் கிராடை நெருங்க, நெருங்க இந்தப் படைகளின் உபத்திரவம் இன்னும் அதிகரிக்கும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

**- யுத்தரங்கம்**

### தீர்ப்பு

மாஜிஸ்ட்ரேட் குனிந்தபடி தீர்ப்பு எழுதிக் கொண்டிருந்தார். அவருடைய முகத்தில் சுபாவமாக உள்ள சோக பாவம் இப்போது அதிகரித்துக் காணப்பட்டது.

அவர் தமக்கு விருப்பமில்லாத காரியத்தைச் செய்து கொண்டிருக்கிறார் என்று தோன்றியது.

மாஜிஸ்ட்ரேட்டின் பெயர் ஸ்ரீ ஆவுடையப்பப் பிள்ளை. காலஞ்சென்ற ஸர் டி. சிவஞானம் பிள்ளை அவர்களின் குமாரர் அவர் என்றும், மாயவரத்துக்கு அவர் வந்து இரண்டு வருஷம் ஆயிற்றென்றும் தெரிந்து கொண்டிருந்தேன். சமீப காலத்தில் மாயவரத்துக்கு வந்த எந்த டிபுடி கலெக்டருக்கும் இவருக்குக் கிடைத்த அளவு 'டின்னர் பார்ட்டி'கள் கிடைத்ததில்லையாம்; அவ்வளவு தூரம் பொது ஜனங்களின் அபிமானத்தைக் கவர்ந்து விட்டிருந்தார். ''இப்படிப்பட்ட நல்ல மனிதருக்கு இந்த வைய கஷ்டத்தைக் கொடுக்கிறோமே?'' என்று என் மனம் சிறிது வருத்த மடைந்தது.

- மூன்று மாதம் கடுங்காவல் - ரா. கி.

## சிதம்பரம் மாநாடு

சிதம்பரம் சர்வகலாசாலையைப் பற்றித் தமிழர்கள் எல்லாரும் பெருமை கொள்ளும்படியான காரியம் - சென்ற மாதத்தில் நடந்தேறியிருக்கிறது. தமிழுக்கும் தமிழ்க் கலைக்கும் ஒரு பெரிய தொண்டைச் சிதம்பரம் சர்வ கலாசாலை செய்து விட்டது. சர்வகலா சாலை இந்தத் தொண்டை மேற்கொள்வதற்குத் தூண்டுதலாக இருந்தவர் ராஜாஸர் அண்ணாமலைச் செட்டியார்தான் என்று சொல்ல வேண்டியதில்லை. அவரைத் தவிர வேறு யாருக்கும் இந்த பிரம்மப் பிரயத்தனமான வேலையைத் தொடங்க தைரியம் வந்திராது. அவருடைய சொந்த முயற்சியும், ஆர்வமும் இருந்திராவிடில் இத்தனை சங்கீத வித்வான்கள் தமிழ் சங்கீத மகாநாட்டுக்கு வந்திருப்பார்கள் என்று ஒரு நாளும் எதிர்பார்க்க முடியாது. மகாநாடு இவ்வளவு சிறப்பாகவும் வெற்றிகரமாகவும் நடந்திராது.

## கிரீக் பாஷை தெரியுமா?

நல்ல சங்கீதம் கேட்க வேண்டுமென்ற ஆசையுடன் பிரபல வித்வான்களின் கச்சேரிகளுக்குப் போகிறதும், அங்கே சங்கீதமெல்லாம் பிற பாஷை மயமாகவே இருப்பதைக் கண்டு வருத்தப்படுவதுமாயிருந்தவர்கள் நமது சங்கீதத்துக்கு இந்த அன்னிய பாஷை விலங்கிலிருந்து விடுதலையே கிடையாதோ என்று ஏங்கியதும் உண்டு. இதைப் பற்றிப் பிரஸ்தாபித்தாலே சிலர் பரிகாசம் செய்யத் தொடங்கினார்கள். ''உங்களுக்குத் தெலுங்கின்மேல் என்னதுவேஷம்?'' என்று சிலர் கேட்டார்கள். இப்படிக் கேட்ட ஒரு நண்பரைப் பார்த்து டி. கே. ஸி. திருப்பி ஒரு கேள்வி கேட்டார். ''உங்களுக்கு கிரீக் பாஷை தெரியுமா?'' என்றார். ''தெரியாது'' என்றார் நண்பர். ''கிரீக் பாஷையின் மீது உங்களுக்கு என்ன, ஐயா, துவேஷம்?'' என்று கேட்டார் டி. கே. ஸி.

## பிடில் தமிழில் பாடுமா?

பூதலூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் கோட் வாத்தியத்தைத் தூக்கிக் கொண்டு மேடைக்கு வந்த போது எல்லாருக்கும் ஒரே ஆச்சரியமாய்ப் போயிற்று. சாதாரணமாய்த் தமிழ்ப் பாட்டு இயக்கத்தைப் பரிகசிப்பவர்கள் ''ஓகோ! புல்லாங்குழல் கச்சேரி கூடத் தமிழிலேயே நடந்ததோ? பிடிலும் தமிழ்ப் பாட்டுப் பாடிற்றோ? மிருதங்கமும் தமிழில்தான் அடித்தார்களோ?'' என்று கேட்பதுண்டு. அதற்குத் தகுந்தாற்போல் இந்தப் பிராமணர் கோட் வாத்தியத்தைத் தமிழிலே வாசிக்க வந்து விட்டாரே என்று நான் கவலைப்பட்டுக் கொண்டிருக்கையில், சாஸ்திரிகள் கணீரென்று கமாசு ராகத்தில் ஒரு தமிழ்க் கீர்த்தனத்தை எடுத்தார்; வாய்ப் பாட்டாகத்தான். சாரீரமாவது சாரீரம்! ரவையாவது ரவை!

- ஆடல் - பாடல் - கர்நாடகம்

## தயவு செய்து சிரியுங்கள்!



போலீஸ்காரன் (ஒரு வீட்டில் தெருப் பூட்டை மறு சாவி போட்டுத் திறந்து கொண்டிருந்த திருடனிடம்) : டேய், அந்தப் பூட்டை என்னடா செய்கிறே?

திருடன்: ஒன்னுமில்லே சாமி! தெருவிலே ஒரு சாவிக் கொத்து கிடந்தது. அது யார் வீட்டுச் சாவியோ அவங்களிடம் கொடுத்துடலாமின்னு ஒவ்வொரு பூட்டாகப் போட்டுப் பார்க்கிறேன்.

## நானறிந்த காந்தி

இந்தப் புத்தகம் பிக்ஷாதிபதி ஒருவரைப் பற்றி ஒரு லக்ஷாதிபதி எழுதியது. இந்தியாவில் பிரசித்தி பெற்ற பிக்ஷாதிபதி மகாத்மா காந்தியென்பது அனைவருக்கும் தெரியும். இந்தியாவின் பிரசித்தி பெற்ற லட்சாதிபதிகளில் ஒருவரான ஸ்ரீ பிர்லா, மகாத்மாவிடம் கொண்டுள்ள அபார பக்தியின் பெருமையை அவரது ''கடல் கடந்த காந்தி''யின் மூலம் அறிந்து கொண்டு வருகிறோம். இந்த ''பாபூ'' என்ற புத்தகத்தின் மூலம் மகாத்மாவின் வாழ்க்கைத் தத்துவங்களை ஸ்ரீ பிர்லா எவ்வளவு தூரம் ஆழ்ந்து அறிந்திருக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

- படித்துப் பார்!



◆ மேரி சுகாசினி

அப்படியும் இருக்கிறார்கள்!'' என்றார் டாக்டர் சுவாமி. ''ஆழ்கடல், விஞ்ஞானம் முதல் விண்வெளி விஞ்ஞானம் வ ரை இங்கே பல துறைகளிலும் இளம் விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்து வருகிறார்கள்!''

பதின்மூன்று துறைகள் கொண்ட ஐ.ஐ.டி.யின் ஒரு துறையான, ஸ்ட்ரக்சுரல் இஞ்சினீயரிங் எனப்படும் கட்டுமானத் துறையில் தொடர்ந்து ஆராய்ச்சி செய்து வரும் இளைஞர், டாக்டர் மெஹர் பிரசாத்.

## நமது இளம் விஞ்ஞானிகள்:

# ஆழ்கடல் முதல் விண்வெளி வரை...

''இது வரை இல்லாத அளவுக்கு, இந்த ஆண்டு மட்டும் நூற்று ஐந்து மாணவர்கள் பி.எச்டி பட்டம் பெற்றிருக்கிறார்கள் இந்தப் பொறியியல் கழகத்திலிருந்து!'' என்கிறார் ஐ.ஐ.டி. எனப்படும் இந்தியப் பொறியியல் கழகத்தின் தலைவர் டாக்டர் என்.வி.சி. சுவாமி.

''ஐ.ஐ.டி.யிலிருந்து பட்டம் பெற்ற கையோடு அயல்நாட்டுக்குச் சென்று விடுகிறார்களே? நம் நாட்டுக்கு என்ன பயன்?'' என்று டாக்டர் சுவாமியைக் கேட்டோம்.

''பட்டம் பெறுகிற அத்தனை பேரும் வெளி நாடு செல்லுவதில்லை. சுமார் பத்து அல்லது பதினைந்து சதவிகிதம் பேர் போகலாம். பல பி.எச்டி.க்கள் கல்வித் துறையில் பிரவேசிக்கின்றனர். ஏராளமான பொறியியல் பட்டதாரிகள் பாதுகாப்புத் துறைக்குச் செல்கின்றனர். ஹெச்.ஏ.எல், ஸ்டீல் அதாரிடி போன்ற நிறுவனங்களிலும் பணி புரியச் சேருகின்றனர்!'' என்கிறார் டாக்டர் சுவாமி.

அப்படியானால் ஆராய்ச்சிப் பட்டம் பெறுவதோடு அவர்கள் நின்று விடுகிறார்களே? தொடர்ந்து தங்கள் துறையில் மேற்கொண்டு, ஒரு குறிக்கோளை நிர்ணயித்துக் கொண்டு ஆராய்ச்சிகள் மேற்கொள்ளுவதில்லையா?

ஹூஸ்டனில் உள்ள ரைஸ் பல்கலைக் கழகத்தில் பி.எச்டி பெற்று இந்தியா திரும்பிய பிறகு, தாம் பயின்ற சென்னை ஐ.ஐ.டி.யிலேயே ஆராய்ச்சி மாணவராக மீண்டும் சேர்ந்தவர் பிரசாத்.

''அமெரிக்காவிலேயே தங்கிவிட உங்களுக்கு மட்டும் எப்படித் தோன்றாமல் போயிற்று?'' என்று கேட்டோம்.

''அம்மா அழகாயிருந்தாலும் இல்லாவிட்டாலும் அம்மாதானே? விட்டுவிட்டு ஒதுங்கிப் போய்விட முடியுமா? என்னுடைய ஆராய்ச்சிகள் தொடர இங்கே எல்லா வ ச தி க ளு ம் இருக்கின்றன.



◆ டாக்டர் சுவாமி

மனத்திருப்தியோடு பணியாற்றுகிறேன்!'' என்றார் பிரசாத்.

பல பட்டம் பதவிகளுக்கு மேல் சிகரமாக, சென்ற ஆண்டு 'நார்மன் மெடல்' என்ற மிக உயர்ந்த விருது பெற்றவர் இந்த இளைஞர்.

கட்டுமானத் திறன் பற்றிச் சிறப்பாக ஆராய்ச்சி செய்து வரும் டாக்டர் பிரசாத், தமது பிரிவின் பணிமனைக்கு நம்மை அழைத்துச் சென்றார். பிரம்மாண்டமான பாலம் கட்டும்போது, அதன் தாங்கும் திறன் எத்தகையது என்று பரிசோதித்து முன்னமே அறியும் பரிசோதனையைச் சுட்டிக் காட்டினார். ஹைட்ராலிக் அழுத்தம் கொடுத்து, ஒரு கான்க்ரீட் தூணை அந்த அழுத்தம் எந்த அளவுக்குத் தாக்குகிறது என்று அறிந்து கொண்டு, அதற்கு ஏற்றபடி கட்டுமானத் திறனைக் கூட்டும் வசதி இருப்பதை எடுத்துக் காட்டினார்.

இவரது ஆராய்ச்சி பூமிக்கும் கட்டடத்துக்கும் இடையேயான, அல்லது ஒன்றுக்கொன்று தொடர்பான, செயல்பாடு பற்றியது. அணைகள் கட்டப்படும்போது, நில நடுக்கம் அங்கே உண்டாகி பாதிப்பு ஏற்படுத்துமா என்ற கோணத்திலும், முரண்பட்ட நிலச் சலனத்தின் பாதிப்பு எத்தகையதாக இருக்கும் என்பது பற்றியும் இவரது ஆராய்ச்சி தொடர்கிறது.

ஆழ்கடல் நடுவே எண்ணெய்க் கிணறுகள் தோண்டும் பணியில் நீரின் நடுவே அமைக்கப்படும் மிதப்பு நிலைக் கட்டுமானப் பணியிலும் இவரது ஆராய்ச்சிகள் பலனளித்து வந்திருக்கின்றன. நம்பகமான டெக்னிக்கை இந்தத் துறையில் இவர் அறிமுகப்படுத்தியிருப்பதாகவும், 1600 அடி நீருக்கு மேல் அமைந்த மேடையில், இதை நிரூபித்துக் காட்டியதாகவும் சொல்லுகிறார். கலிபோர்னியாவில் அணுசக்தி கூடம் ஒன்றில், நில நடுக்கத்தின் பாதிப்பு பற்றிய ப்ராஜக்ட் ஒன்றைத் திறம்பட அமைத்துக் கொடுத்த விஞ்ஞானி டாக்டர் பிரசாத்.

இது போன்ற ஆராய்ச்சிகள் எந்த விதத்தில் பலன் அளிக்கின்றன என்று அறிய ஒரு சிறு உதாரணம்: ரயில்கள் செல்ல அமைக்கப்படும் இருப்புப் பாதையில் தண்டவாளத்துக்கிடையே முன்பு மரக் கட்டை 'ஸ்லீப்பர்கள்' தாம் பொருத்தி வந்தார்கள், இல்லையா? பதினேழு வருடங்களுக்கு முன்பு, ஐ.ஐ.டியின் இந்தத் துறையிலிருந்துதான் கான்க்ரீட் 'ஸ்லீப்பர்கள்' தயாரிக்கப்பட்டு, பரிசோதிக்கப்பட்டு, பொருத்தப்பட்டன. செலவு 35 சதவிகிதம் மிச்சம்; 50 சதவிகிதம் கூடுதலாக உழைப்புத் தருவதையும் அப்போது உணர்ந்தார்கள். இன்றும் கூட, ஜெர்மனியிலிருந்து சென்னை ஐ.ஐ.டி.யின் ஸ்ட்ரக்சுரல் எஞ்சினீயரிங் பிரிவுக்கு, இம்மாதிரி 'ஸ்லீப்பர்கள்' தரப் பரிசோதனைக்கு வருகின்றன!

ஆராய்ச்சி செய்து வரும் இன்னொரு இளம் விஞ்ஞானி, செல்வி மேரி சுகாசினி.

ரிஸ்ட் வாச்சுகள், கால்குலேட்டர்களில் வைக்கப்படும் பட்டன் செல்களைத் தயாரிக்கும் ஆராய்ச்சியில் கடந்த நான்கு ஆண்டுகளாக ஈடுபட்டிருக்கிறார் மதுரையைச் சேர்ந்த இவர்.

◆ டாக்டர் மெஹர் பிரசாத்



டார்ச்சுகளில் போடப்படுவது ட்ரை செல்கள் என்றாலும் ஸாலிட் ஸ்டேட் வகையைச் சேர்ந்தவை அல்ல. பட்டன் செல்கள் ஸாலிட் ஸ்டேட் வகையைச் சேர்ந்தவை. (ஸாலிட் ஸ்டேட் என்பதை திடப் பொருள் என்று சொல்லலாம்)

பரிசோதனைச்சாலை அளவில் நிறைய செல்கள் செய்து பார்த்திருக்கிறார் மேரி சுகாசினி. ஆனால் வெள்ளியைப் பயன்படுத்திச் செய்யப்படும் இந்த செல்கள் விலை அதிகமாகும் என்பதால், தாமிரத்தை அடிப்படையாகக் கொண்ட செல்களை உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார். அப்போதுதான் வியாபார ரீதியாக அவை பயன்படும். இந்த செல்கள் கடிகாரங்களுக்கு மட்டுமல்லாது, இதயத்துடிப்பைச் சீராக்கும் 'பேஸ் மேக்கர்' இயந்திரத்தில் பொருத்தவும், விண்வெளி



ரசிகர் : "ஏன் சார் முன்ன மாதிரி நீங்க 'வெயிட்'டான கதைகள்ளாம் எழுதறதே யில்லை?"
"ஹி... ஹி... ஸ்டாம்ப் ஒட்டிக் கட்டுப் படியாகலைங்க!"

- வேதபுரி எல். இரமேஷ்.

"என்னங்க காலையில் தண்டால் எடுக்கறீங்க. இனிமே ரெகுலரா உடற் பயிற்சி செய்யப் போறீங்களா?"
"இல்லடி... நாளைக்குக் கட்சி மாறப் போறேன். புதுத் தலைவர் காலில் விழணும். அதுக்குத்தான் டிரெய்னிங்!"

- அ. சுகுமார்.



ஆராய்ச்சிகள் சிலவற்றுக்கும், பாதுகாப்புத் துறைக்கும் மிகவும் பயன்படும் என்கிறார் இவர். "இதன் ஆயுட்காலம் அதிகம் : பத்து வருடங்களுக்கு மேல் வரும். நம்பகமானது, திறன் மிக்கது, சிக்கனமானது!" என்று சொன்ன மேரி, அடுத்து, பாலிமர் பாட்டரி செல்கள் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடப் போவதாகவும் குறிப்பிட்டார். அதற்கு முன் அமெரிக்கா, இங்கிலாந்து சென்று, தேர்ச்சி பெற்று இந்தியா திரும்பப் போவதாகக் கூறுகிறார் இவர்.

அலைகளின் வேகத்திலிருந்து மின் சாரம் தயாரிக்கும் ஆராய்ச்சி, ஓஷன் இஞ்சினியரிங் துறையில் நடைபெற்று வருகிறது. ஆறாயிரம் கிலோ மீட்டர் தூரமுள்ள இந்தியக் கடற்கரைப் பகுதியிலிருந்து 40,000 மெகாவாட் மின்சாரம் தயாரிக்க வாய்ப்பு உள்ளதாம்! டாக்டர் சி. கணபதியும், டாக்டர் ஆர். சுந்தரவடி வேலுவும் கடலடியிலுள்ள பொருள்கள் பற்றிய தகவல் சேகரிப்பிலும், பல்வேறு சூழ்நிலைகளில் கடல் அலையின் தாக்கம் பற்றியும் ஆராய்ந்து வருகிறார்கள். இதனால் கப்பலின் கட்டுமானத்தில் செய்ய வேண்டிய மாற்றங்கள் பற்றி உபயோகமான தகவல்கள் கிடைக்கும்.

விண்வெளி ஆராய்ச்சிப் பொறியியல் துறையில் சில இளம் விஞ்ஞானிகள், அயல் நாட்டுப் பல்கலைக் கழகம் அல்லது இந்திய விண்வெளி ஆராய்ச்சி மையத்துடன் இணைந்து ஆராய்ச்சிகள் செய்து வருகிறார்கள். இவற்றுள் பல பாதுகாப்புத் துறைக்கு உதவுவன.

ஜெட் எஞ்சின் மற்றும் எரிவாயு டர்பைன்களின் திறன் குறித்த ஆராய்ச்சி ஒரு புறம். விமானம் எதிரியால் தாக்குண்டு சேதப்பட்டால் விமானி தான் தப்பிக்க ஒரு பட்டனை அழுத்த, அவர் தாம் அமர்ந்திருக்கும் ஆசனத்துடன் வெளியே தூக்கி எறியப்படுவார். பின்னர் பாரசூட் விரிய, மெல்ல மெல்ல இறங்குவார். இப்படி போர் விமானங்களிலிருந்து வெளியே வெகு வேகத்துடன் தூக்கியெறியப்படும் விமானிகள் பலரும் பயங்கரச் சேதப்பட்டு மரணம் கூட அடைகிறார்கள். விமானிகள் வெளியே வீசப்படும்போது, அந்த வேகத்தை மட்டுப்படுத்தும் ஆராய்ச்சிகள் மறுபுறம் நடக்கின்றன.

"கட்டுப்பாடும், கட்டிப் போடுதலும் ஊக்கம் மிகுந்த எவரையும் துவண்டு போகச் செய்யும். அதற்கு மாறாக, நீங்கள் எங்கு வேண்டுமானாலும் போங்கள்; உங்கள் அறிவுத் தாகத்தைத் தணித்துக் கொண்டு, இன்னும் கூர்மையுடன் செயலாற்ற நம் நாட்டுக்கே திரும்ப வாருங்கள் என்று சொல்லிவிட்டால், அந்தச் சுதந்திர உணர்வே அவர்களை மேலும் மேலும் உத்வேகத்துடன் செயல்படத் தூண்டும்" என்கிறார் டாக்டர் சுவாமி, நம்பிக்கையோடு.

- சாருகேசி

அட்டை வண்ணப்படங்கள்,
புகைப்படங்கள் : ரமணன்.

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 150/- விமானத் தபால்: ரூ. 350/-.




# மிருதுவான போஷாக்கு

**உங்கள் குழந்தைக்கு 4 மாதங்களாகும் சமயத்தில் அவனது இயற்கை உணவான பாலுடன் எளிதில் ஜீரணிக்க உகந்த போஷாக்கு உணவான நெஸ்டத்தையும் கொடுங்கள்.**

பாலுடன் கலந்து தயாரிக்கப்பட்ட நெஸ்டம் உங்கள் குழந்தையின் மிருதுவான முதல் திட உணவாகும். ஏனெனில் இதில் குழந்தை ஆரோக்கியமாய் வளர்வதற்குரிய எல்லா போஷாக்குகளும் சமச்சீர் அளவில் அடங்கியுள்ளன. உங்கள் குழந்தையின் உணவில் வெவ்வேறு சுவையைக் கூட்ட விரும்பினால், அவ்வகை உணவுடன் நெஸ்டத்தை கலந்து கொடுங்கள். உதாரணமாய் வேக வைத்த பழங்கள், வேகவைத்து மசிய வைத்த காய்கறிகள் மற்றும் பருப்பு வகைகள்.

அரிசி சேர்த்த நெஸ்டம் போஷாக்கு நிறைந்த ஸிரியல் ஆகும். உங்கள் குழந்தை இதை எளிதில் ஜீரணிக்கும். உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு மருத்துவர்கள் சிபாரிசு செய்யும் எல்லாவித போஷாக்கும் இதில் உள்ளன. உறுதியான எலும்புகளுக்கும் பற்களுக்கும் தேவையான கால்ஷியம்; ஆரோக்கியமான ரத்தத்திற்கு தேவையான இரும்பு சத்து; பட்டு போல் பளபளக்கும் சருமத்திற்கும், ஒளிவீசும் கண்களுக்கும், நோய் எதிர்ப்பு சக்திக்கும் தேவையான வைட்டமின்களும் இதில் அடங்கியுள்ளன.

உங்கள் செல்லக் குழந்தை நெஸ்டத்துடன் சேர்ந்து வளர்வதை கவனியுங்கள்.

இலவச நெஸ்டம் செய்முறை புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25, புது டில்லி-11006.

எளிதில் ஜீரணிக்க வல்ல பேபி ஸிரியல்

**நெஸ்டம்**

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka



பாத்திரம் கழுவ மட்டுமே ஏற்ற பொடிகளை உபயோகித்து உங்கள் கேசத்தை சித்திரவதை செய்கிறீர்களா?

அறிமுகப்படுத்துகிறோம்!

ஒரிஜினல்

# மீரா

ஹெர்பல் சீயக்காய் பவுடர்

கேசத்திற்கு முழுப் பராமரிப்பு






**சீயக்காய் கதை :**

கேசத்திற்கு சீயக்காய் மிகவும் நல்லது. ஆனால், தரம் தாழ்ந்த கலப்படம்செய்யப்பட்ட சீயக்காய் பொடிகள் கேசத்தை நாசமாக்கும். அவை பாத்திரம் கழுவத்தான் ஏற்றவை. இன்றைய சூழ்நிலையில் அதை வீட்டிலே தயாரிக்க உங்களுக்கு நேரம் இருக்கிறதா? அமிலமுள்ள ஷாம்புகளும் எண்ணெய்ப்பசைகளும், சீயக்காய் சோப்புகள் கிடைக்கின்றன. ஆனால் அமிலமுள்ள கொழுப்பினால் கேசம் ஒட்டிக் கொண்டு சிக்குப்பிடிக்கும்.

**சீயக்காய்ப் புரட்சி :**

இப்போது வந்திருக்கும் மீரா ஒரிஜினல் ஹெர்பல் சீயக்காய் பவுடர் வீட்டிலேயே தயாரிக்கப்படும் சீயக்காய் போலவே, நன்மை தரும் மூலிகைகளும், இயற்கையான கண்டிஷனரும் கொண்டு கேசத்தைப் பராமரிக்கிறது. பொடுகை நிரந்தரமாக நீக்குகிறது.

Beauty Cosmetics